உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௮.] விஷு௵ வைகாசி௴ [பகுதி-௭.
Vol. 38. May—June 1941. No. 7.

## பரதாழ்வான்வைபவம்

[௨௫௩-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

பின்பு குகபரதசமாகமம் சொல்லக்கருதிய மஹாகவி,

> வந்தெதிரே தொழுதானை வணங்கினன் மலர்நந்த
> அந்தணனுந் தனைவணங்கு மவனுமவ னடிவீழ்ந்தான்
> தந்தையினுங் களிகூரத் தழுவினன் தகவுடையோர்
> சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குஞ் சீர்த்தியான்.

என்கிறார்.

இதனுள், வந்து என்றது, 'ஒருதனியே தான்வந்தான்' என்று முன்சொல்லிய குஹப்பெருமாளதுவருகையை, அவன் பரதனை வணங்குதற்கு விசேஷணமாக அநுவதித்துக்கூறியபடி. வந்து வணங்கினன் எனக் கூட்டுக.

எதிரேதொழுதானை என்றது, 'திசைநோக்கித் தொழுகின்றான்' என்று முன்சொல்லியபடியே இராமபிரான்சென்றதிசைநோக்கித் தொழுதவனாயுள்ள பரதாழ்வானை என்பதாம்.

வணங்கினன் என்றது, பரதாழ்வானுடைய பிரபாவம் அறியாமையாலே ராஜகுமாரன் என்பதுபற்றி லோகமர்யாதையாலே வேடனானநிலைகொண்டு குகன்வணங்கினன் என்பதாம்.

இப்படி வணங்குகிற குஹப்பிரபாவத்தை முன்னமே சுமந்திரரால் தெரிந்துகொண்ட பரதாழ்வானுடையபிரபாவத்தைக் கொண்டு குஹப்பிரபாவம்சொல்லக்கருதிய மஹாகவி, 'மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனும் அவனடிவீழ்ந்தான்' என்கிறார். இதன்கருத்து, பகவதம்சபூதனும், திருவாழியாழ்வானவதாரமாயுமுள்ளவனுகையாலே பிருஹ்மாதிதேவர்களாலும் வணங்கப்பெறும் பெருமையுடைய பரதாழ்வான், சுமந்திரன்சொல்லிய ஆப்தவாக்கியப்பிரமாணத்தாலே பாகவதோத்தமனென்று தெரிந்துகொள்ளப்பெற்ற அந்தக் குகப்பெருமாள்திருவடிகளிலே ஸ்வரூபப்ராப்தமாகவே தெண்டாகாரமாய்விழுந்து சேவித்தான் என்பதாம்.

இதனால் எத்துணை உயர்வுடையோர்க்கும் பகவத்ப்ராப்தியடைந்த பாகவதர் பூஜ்யராவர் என்பது காட்டப்பட்டது.

தந்தையினும் களிகூரத் தழுவினன் என்றது, பரதாழ்வானுடைய ராமபக்தியறியாதநிலையில் குகன் அவன் இராமனுக்குத் தம்பியென்பதுபற்றித் தன்னிடம் ஜ்யேஷ்டப்ராத்ருபுத்திபண்ணிச் சேவித்தான் என்று எண்ணி, ஜ்யேஷ்டப்ராதா பித்ருசமானனுகையாலே பித்ருபாவம்கொண்டு 'ராஜகுமாரனை ஒருபுத்திரனைப்பெற்றேனே!' என்ற குதூஹலத்தாலே தந்தையினும் களிகூரத் தன் இரண்டுகையாலும் தழுவி எடுத்தான் என்பதாம்.

இனி, 'மலரிருந்த அந்தணனும் தனைவணங்கும்படி உயர்வுடைய பரதாழ்வான் தன்னைவணங்கிநின்ற வேடர்குலத்தவனான குகனுடைய அடியில் விழுந்து கும்பிட்டான் என்பது தகாது; அன்றியும், அவனை முன்பு வணங்கிநின்ற குகன், 'தந்தையினுங் களிகூரத் தழுவினன்' என்பதும் தகாது' என்று ஒருசிலர் குற்றங் கூறுதல்கூடும் என்று உணர்ந்த மஹாகவி, அது குற்றமாகாதென்று பரிகரிக்கவேண்டிக் குகப்பெருமாளுடைய பிரபாவம் தோன்றும்படி, அவனைத் 'தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியான்' என்கிறார்.

தகவுடையோரென்பார், விதிக்கிலக்காதலால் இவை செய்யத்தகும், விலக்கிற் கிலக்காதலால் இவை செய்யத்தகா, என நல்வினையும் தீவினையுமாகிய இருவினைகளையும் அறிந்து தக்கவையாகிய நல்

வினைகளையே மேற்கொண்டொழுகும் பிராமாணிகரான பெரியோராவர். அவர்களுடைய சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்கும் சீர்த்தியுடையோன்' குகன் என்கிறார். இதனால், குகனுடைய சீர்த்தி தகவுடையோர்சிந்தையினும் சென்னியினும் வீற்றிருக்குமென்றாராயிற்று. சீர்த்தியெனினும் குருத்துவமெனினும், பிராபவமெனினும் ஒக்கும். சீர்த்தியாவது—பிறரெல்லாம் தனக்குக் கீழ்ப்படத் தான் மேற்பட்டுவிளங்குமியல்பு. அது இங்கு மலரிருந்த அந்தணனும் தனைவணங்குமவனால் அடியில்விழப்பெறுகையாயிற்று. இதனையே இங்குக் குகனுக்குள்ள சீர்த்தியென்கிறார். அது தகவுடையோர்சிந்தையில் வீற்றிருத்தலாவது, அது தக்கதென்று அவர் மனங்கொள்ளப்படுதல்; சென்னியில்வீற்றிருத்தலாவது; அது தகும் என்று முடிவணங்கிய குறிப்பால் உடன்படுதலும், அவரால் மேலாகக்கொள்ளப்படுதலுமாம்.

அன்றியும், இவ்வொழுக்கம் தகுமென்பார் ஒருசாராரும் தகாதென்பார் ஒருசாராரும் மாறுபடுவர்; அவர் தாந்தாங்கொண்ட கொள்கைக்குத் தாம் தாமே முடிவுகட்டுதல் தகாது, அவ்விரு திறத்தாரினும் வேறான நடுவுநிலை (தகவு) உடையாரே முடிவுரைத்தற்குரியர்; அவர் சிந்தையினும் சென்னியினும் இவன் சீர்த்தி வீற்றிருக்குமாதலால், இது தகாதென்று சொல்லற்க: என்று பரிகரித்தபடி. இங்குத் தகவென்றது நடுவுநிலையாதல், "தக்கார் தகவிலரென்ப தவரவர்-எச்சத்தாற் காணப்படும்" என்னும் குறளுரையான் அறிக.

பின்பு, குகபரத சம்பாஷணம் கூறுகிறவர்,

'தழுவின புளிஞர் வேந்தன் தாமரைச் செங்கணானை
எழுவினு முயர்ந்த தோளாய் எய்திய தென்னை' என்றான்

என்கிறார்.

இதனுள், தழுவின புளிஞர் வேந்தன் என்றது, 'தந்தையினுங்களிகூரத்தழுவினா'னென்று முன்புசொல்லப்பட்ட வேடர்க்கரசனாகிய குகன் என்பதாம். 'தழுவின' என்றதனால் பித்ருபாவத்தோடு ஹிதபரனாயுள்ளவன் என்பதும், 'புளிஞர்வேந்தன்' என்றதனால் பரதன் சொல்லும் காரியத்தை முடித்துக்கொடுக்குந்திறமுடையவன் என்பதும் குறிப்பாகும்.

தாமரைச் சேங்கணானை என்றது, உத்தமபுருஷனென்றறுதியிடும்படி செந்தாமரைமலர்போல் விளங்கும் கண்களையுடைய இராமபிரானோடொப்புடையனாய்நின்ற பரதாழ்வானை (நோக்கி) என்பதாம். அன்றியும், இராமனைப்பிரிந்து வருந்தும் சோகத்தோடு அழுது சிவந்ததனாலே கண்ணீர் மல்கிய தாமரைபோலே, சிவந்து விளங்கும் கண்களையுடைய பரதாழ்வானை (நோக்கி) எனினும் ஆம்.

எழுவினும் உயர்ந்ததோளாய் எய்தியது என்னை என்றது, உன்னுடைய தந்தையின் நியமனத்தால் உனக்கு ராஜ்பம் கிடைத்திருக்கிறது; "அங்குள கிளைகாவற் கமைதியின் உளன் உம்பி" என்று அதனை இராமனும் இசைந்திருக்கிறான். இந்நிலையில் அவ்விராஜ்யத்தை யாளுதற்குரிய தோள்வலியும் உடையையாயிருந்தும், அதனை மேற்கொள்ளாது, தவவேடந்தாங்கி அழுகையும் கண்ணுமாய் வருதற்கு இடையூறுயெய்திய காரணம் என்னை? படையுடன்கூடி இங்கு நீ எய்தியகாரணம் என்னை? என்று வினவினான் என்பது.

இதற்குப் பரதாழ்வான்,

'முழுதுல களித்த தந்தை முந்தையோர் முறையி னின்றும்
வழுவினன் அதனை நீக்க மன்னனைக் கொணர்வான்' என்றான்.

என்கிறார்.

இதன்கருத்து, உலகமுழுதும் ஆண்ட நம் தந்தையாகிய சக்ரவர்த்தி, அவருக்குத் தாதைமுதலான மேலோர்களெல்லோரும் தத்தம் அரசியலைத் தத்தம் மூத்தமகனுக்கே உரித்தாக அளித்துச்செல்வது முறை, அம்முறையினின்றும் வழுவினான்; அதாவது தன் மூத்தமகனாயும், முழுதுலகாளியாயுமுள்ள இராமபிரானுக்குதவாது, யானைமேலிடும் தவிசை நாய்மேலிடுவாரைப்போலே ஆண்டானுடைமையை அடியானுக்கிட நினைந்தான்; அவன் அங்ஙனம் நினைந்த பிழையைத் தீர்க்கவேண்டி, இயல்பாகவே மன்னவனாயுள்ள இராமபிரானை அழைத்துச்செல்லுதற்கு ராஜமரியாதைக்குரிய எடுபடியான படை, பரிஜனம், பௌரஜனங்களுடன் சேர்ந்துவந்தேன் என்றான் என்பதாம்.

இதனால் பரதாழ்வான் மனநிலையறிந்தபின்பு குகன்செயல் கூறுவார்,

கேட்டனன் கிராதர் வேந்தன் கிளர்ந்தெழு முயிர னாகி
மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான் விம்மின னுவகை வீங்கத்
தீட்டரு மேனி மைந்தன் சேவடிக் கமலப் போதிற்
பூட்டிய கையன் பொய்யி லுள்ளத்தன் புகல லுற்றான்.

என்கிறார்.

இதன்கருத்து, இப்படிப் பரதாழ்வான்திருவுள்ளக்குறிப்பைக் கேட்ட குகப்பெருமாள், முன்பு, பகவத்விரோதியாய்ப் போர்கருதிவருகிறான் என்று அதிசங்கைபண்ணப்பெற்ற பரதன், இப்போது பகவத்கைங்கரியபுத்தியோடுவருகிற பாகவதோத்தமனென்று தெரிந்துகொண்டவுடனே, அவனோடு பகைமைகொண்டிருந்த தான் உயிர் இறந்துபோய்ப் பின் வேறோருயிர் முளைத்துக் கிளைத்தாற்போன்ற மனநிலையுடையனாய், இவன் பரமபாகவதன் என்று தெரியாதே இவன்திருவடிகளில் அபசாரப்பட்டேனே! என்னும் அநுதாபத்தோடு ஒருமுறை தெண்டனிட்டு அபராத க்ஷாபணம்பண்ணிக்கொண்டு, மறுமுறையும் தரையில்விழுந்து தெண்டனிட்டு, போர்செய்து உயிரிழக்கக்கருதிநின்ற எனக்கு ஆத்மலாபமுண்டாயிற்றே! என்னும் அகமகிழ்ச்சியால் விம்முதலுற்று மகிழ்வுடையனாகி, ஓவியவினைவல்லோரால் ஊசிகொண்டு தீட்டுதற்கும் உதவாதபடி மிகமெலிந்ததிருமேனியையுடைய பரதாழ்வானுடைய திருவடிகளிரண்டும் அஞ்சியகலாதிருக்கும்படி இறுகப்பிடித்துக்கொண்டு முகமனாகப்பேசாமல் பொய்யில்லாத உள்ளமுடையவனாகவே பேசுகிறான் என்பதாம்.

சேவடிக்கமலப்போதிற் பூட்டியகையன் என்றதன் குறிப்பு, இறைவனடியார் ஒருவரையொருவர் தெண்டனிடுதலை இசைந்திருந் தேற்றுக்கொள்ளாது அஞ்சி அகலுவர்; அவ்வாறு பரதாழ்வான் அஞ்சி அகலாதிருக்கவேண்டி, அவன் சேவடிக் கமலப்போதிற் பூட்டியகையனானான் என்பதாம்.

இனி, அவன்பேசுமாறு கூறுவார்,

தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப்
போயினை யென்ற போது புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கே ழாவரோ அறியின் அம்மா. என்கிறார்.

இதனுள், ஆயிரம் இராமர் நின்கே ழாவரோ! என்றது, பாகவத ப்ரபாவம் உண்மையாகச்சொல்லியதென்றுகொள்ளாது, குகன் வாயால் முகமனாகவும், கவிவாயால் அதிசயோக்தியாகவும் கூறி யிருக்கலாமென்று ஒருசிலர் கைநெகிழவிடவுங்கூடும்: என்பதை நினைந்தே மஹாகவி, இது முகமனுமன்று; அதிசயோக்தியுமன்று; என்று காட்டவேண்டி (முன்னமே) 'பொய்யிலுள்ளத்தன் புகலலுற் றான்' என்று குகன்பேச்சில் பிராமாண்யபுத்திபண்ணும்படி முன் னுரைகூறிக்கொண்டார்; அதனைத் "தாயுரைகொண்டு" என்று தொடங்கிய இப்பாட்டால் நிரூபிக்கிறார்.

இதன்கருத்து:—உலகத்தில் ஒருவருக்கு இயல்பாகவே முடிசூட லமையுமானால் அதனை நல்வினைப்பயனென்று உவப்போடு ஏற்றுக் கொள்வர்; அதுவே தாதையாலுதவப்பெறுமானால் பிதிருவாக்கிய பரிபாலனதர்மமாயுமிருப்பதுபற்றி அதனினும்பதின்மடங்கு உவப் போடும் ஏற்றுக்கொள்வர்; அது தாதையினும் சிறந்த தாயால் உதவப்பெறுமாயின், அதனினும் பதின்மடங்கு உயர்வுடையதாம்; அதுவே தாயும் தாதையும் இருவரும் சேர்ந்துதவப்பெற்றால் அத னினும் பதின்மடங்கு உயர்ந்ததாம். இங்ஙனம் ஆயிரமடங்கா லுயர்ந்த முடிசூடல்கிடைக்குமாயின் 'மெய்த்திருப்பதம் மேவென்ற போதினில், சித்திரத்தினலர்ந்த செந்தாமரையொத்து' விளங்கிய திருமுகமண்டலமுடைய இராமன் மிகவும் நல்வினையென்றெண்ணி ஏற்றுக்கொள்ளாதிரான். ஏற்கவேகருதியிருப்பான். அங்ஙனம் ஏற்கக் கருதாது நீ, தீவினையென்றெண்ணியதுமன்றி, அதனை அவனுக்கே அர்ப்பணம்செய்து அவனுக்கு அடியனாயிருக்கக்கருதி, அவன் கொள்வானோ? அல்லனோ? என்றசிந்தனையால் முகம்வாடிநின்றனை, அதனால் உன்னுடையபெருமையை அளக்குங்கால் இராமன் பெருமையினும் ஆயிரமடங்கின் மிக்கதாயிருக்கும் என்றான் என்ப தாம்.

இது இறைவன் அடியாரிடம் எல்லாவற்றையும் கொள்பவனா யும், அடியார் எல்லாவற்றையும் கொடுப்பவராயுமிருத்தலால் இறை வன்பெருமையினும் அடியார்பெருமை பெரிதென்றுகாட்டியபடி.

இதுகேட்ட பரதாழ்வான், தன்னைப்புகழ்தல் சஹியாதவனாய் உமக்கு விதேயனான என்னை நீர் இப்படிப் புகழலாமா? என்ன, அதற்கு மறுமொழியாக,

என்புகழ் கின்ற தேழை யெயினனேன் இரவி யென்பான்
தன்புகழ்க் கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்கு மாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்க ளெல்லாம்
உன்புக ழாக்கிக் கொண்டாய் உயர்குணத் துரவுத் தோளாய்.

என்கிறான்.

இதன்கருத்து, உன்னுடைய பெருமைக்குணங்களை விரித்தெடுத்துரைக்கத்தக்கோர் சகலசாஸ்திரார்த்தங்களும் தெரிந்து தர்மசூக்ஷ்மநிரூபணம்பண்ணவல்ல பெரியோர்களேயாவர். அத்தகுதி சிறிதுமில்லாத அறிவிலியாயும் வேடனுயுமுள்ள எளியேனுரைப்பது எவ்வளவு பொருந்தும்? சிறிதளவும் பொருந்தாது; ஆயினும், என்மனத்துள் அடங்காது வாய்சோர்ந்து சொல்வதைக் கேட்பாயாக. சூரியன் தன் சுடரொளித்தோற்றத்தால் சந்திரன் முதலான விண்மீன்கணங்களின் கதிரொளிகளையெல்லாம் தன் சுடரொளியில் அடங்கச்செய்துகொண்டுவிளங்குகிறான் என்றால், அது சூரியனைக்குறித்துப் புகழ்ந்ததாகுமா? ஆகாது. அதுபோலே நீயும் நம் முன்னவனாகிய இராமசந்திரன்முதலான நம் குலமூதாதைகளின் புகழொளியெல்லாம் உன் புகழொளியுள் அடங்கும்படி விளங்குகிறாய்: என்றால் அது உனக்குப் புகழாகுமா? ஆகாது என்பதாம்.

இவ்வாறு குகப்பெருமாள்வாயாலே பரதாழ்வான்வைபவம் சொல்லிய அளவில் அமையாமல் தம் வாயாலும் சொல்லவிரும்பிய மஹாகவி,

எனவிவை யன்ன மாற்ற மியைவன பலவுங் கூறிப்
புனைசுழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் பொருவில் காதல்
அனையவற் கமைவிற் செய்தான் ஆரவற் கன்பி லாதார்
நினைவருங் குணங்கொ டன்றே இராமன்மேல் நிமிர்ந்த காதல்.

என்கிறார்.

இதனுள், என இவையன்ன மாற்றம் என்றது, குகப்பெருமாள் வாயாலே முன்சொல்லியமட்டன்றி, அவைபோலும் பல மறுமொழிகள் என்பதாம்.

அம்மறுமொழிகளை விசேடிக்கிறார் இயைவன என்று. அதாவது: முகமனாகவாவது புனைந்துரையாகவாவது கூறாது பரதாழ்வானுக்கு உண்மையாயுள்ள வைபவங்களை என்பதாம்.

புனைகழற் புலவு வேற்கைப் புளிஞர்கோன் என்றது, ஜீவஹிம்ஸைசெய்யும் வேடர்குலத்தலைவனைக் காலுங் கழலும் வேலும் கையுமாக வீரங்குடிகொண்ட வன்னெஞ்சுடையனைத் தன் பரிசனங்களுடன் இவனைப் பகைத்துநின்ற குகனும் என்பதாம்.

பொருவில்காதல் என்றது, பிறிதொன்றை உபமானமாகக் காட்டிச் சொல்லுதற்கியலாது நெஞ்சுநெகிழ்ந்துருகும் நிரவதிகமான அன்பை என்பதாம்.

அனையவற்கு என்றது, இவன் செய்யும் அன்பிற்கு அநுரூபமாய் நிரதிசயமான குணாதிசயமுடைய பராதாழ்வானுக்கு என்பதாம்.

அமைவிற்செய்தான் என்றது, 'அவன்குணங்களுக்கு இவன் செய்யும் அன்பே அமையும்; இவன்செய்யும் அன்பிற்கும் அவன் குணங்களே அமையும்' என்னும்படி நிரவதிகமான அன்புசெய்தான் என்பதாம்.

ஆரவற்கன்பிலாதார் என்றது, பகைமைகொண்டுநின்ற குகனே பேரன்புடையனானால் நண்புகொண்டோர் அன்புடையராதல் சொல்லவும்வேண்டுமோ? என்பதாம்.

நினைவருங் குணங்கண்டன்றே இராமன்மேல் நிமிர்ந்தகாதல் என்றது, அவனை நினைக்கும்போதே நினைப்பவர்நெஞ்சில்வந்துநிற்கும் வள்ளற்றன்மைமுதலிய குணமுடைமைகண்டதனாலன்றே முன்பு இராமன்மேலும் மிகவும் உயர்ந்த அன்பு இவனுக்கு உண்டாயிற்று; இவனுடைய வள்ளற்றன்மையும் அன்னதே என்பதாம். நினை-முதனிலைத்தொழிற்பெயராய், 'நினைதலின்கண்ணே' என்னும் பொருள்படநின்றது.

இதனால், பகவத்குணம்போலே பாகவதகுணங்களும் பிறரை அன்புடையராய் ஈடுபடச்செய்யுமென்பதாயிற்று.

திரு. நாராயணையங்கார்,
பத்திராசிரியர்.

---

௳

# இயற்கைநவிற்சியும் செயற்கைப்புனைவும்

புன்னாலைக்கட்டுவன் வித்துவான். ஸ்ரீ. சி. கணேசையாவர்கள்.

புலவர்கள் தாம் பாடும் பாட்டுக்களில் ஒருபொருளை அமைத்து உணர்த்துங்கால் அதனியல்பையெடுத்தோதியும் உணர்த்துவர்; உவமைமுதலிய அலங்காரங்களால் அழகுபடுத்தியும் உணர்த்துவர். அவ்வாறுணர்த்துவனவற்றுள், முன்னையது இயற்கைநவிற்சியெனவும், பின்னையது செயற்கைப்புனைவு எனவும்படும்.

அவ்விரண்டனுள்ளும், இயற்கைநவிற்சியே பெரிதும் அமையச் செய்யுள்செய்தனர் சங்கச்சான்றோர்கள். செயற்கைப் புனைவே பெரிதும் அமையச் செய்யுள்செய்தனர் பிற்காலத்துப் புலவர்கள். இவ் விருபகுதியார்செய்தவற்றுள்ளும் முற்காலத்தார் செய்தவற்றையே பெரிதும்போற்றுவர் ஒருபகுதியார், பிற்காலத்தார் செய்தவற்றையே பெரிதும்போற்றுவர் மற்றொருபகுதியார். முற்காலத்தார்செய்தவற்றுள் இயற்கைநவிற்சியே பெரிதும் அமைந்திருத்தலானும் அதனை நவிலுதற்கு அத்துணை நுண்ணுணர்வு வேண்டியதின்மையானும், உவமைமுதலிய அலங்காரங்களானே புனைந்துகூறுதற்குப் பெரிதும் நுண்ணுணர்வுவேண்டுமாதலானும் பிற்காலத்தார்செய்யுள்களே சிறந்தனவென்பது அச்செய்யுள்களைப் போற்றுவார்கருத்தாகும். செயற்கைப்புனைவிற்கு எத்துணை நுண்ணுணர்வுவேண்டுமோ அத்துணை நுண்ணுணர்வு இயற்கைநவிற்சிக்கும்வேண்டுமாதலின் இரண்டும் ஒப்பச் சிறந்தனவென்பதே எமது கருத்தாகும். அவ்வாறு ஒப்பச் சிறந்தனவென்பதை இங்கே சில செய்யுள்களில்வைத்து விளக்கிக்காட்டுதும்.

ஒரு குழந்தை தன்தந்தை உண்ணக்கண்டால் தானும் உடனிருந்துண்ணும்படி குறுகக்குறுக அடியெடுத்துவைத்து விரைந்துநடந்துவரும். (குறுகுறு என்பது அண்மையில் அடியெடுத்துவைத்து விரைந்துசேறலை உணர்த்துவதொரு குறிப்புச் சொல்.) வந்து தந்தை உண்ணுங் கலத்தின்பக்கத்தே இருக்கும்.

இருந்து, தன் சிறுகையை நீட்டி உண்கலத்திலுள்ள சோற்றை அள்ளி நிலத்திலே போடும். (மீளவும் அக்கலத்திலே போடும் எனினுமாம்). தந்தையுடன்கூடப் பிசைந்து தோண்டி அள்ளும். (அச்சோற்றைத் தொட்டுப்பார்க்கும் எனினுமாம்). மீள ஒருதரம் அள்ளி வாயாற் கௌவும். மீள ஒருதரம் அச்சோற்றைத் துழாவும். மீள ஒருதரம் அச்சோற்றை அள்ளி உடம்பிற்படும்படி சிதறும். இப்படிக் குழந்தைகள் பலவகையான பயனற்றசெயல்களைச் செய்துகொண்டு தந்தைமாரோடுகூட இருந்துண்பது இன்றும் நிகழும் உலகியல்பு. இவ்வியல்பினை ஒரு புலவன்,

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்கள்"

எனத் தன் செய்யுளிலமைத்து, ஒரு குழந்தை உண்பதை நாம் நேரேகண்டாற்போலக் காணுமாறு படம்பிடித்துக்காட்டுகின்றான். இத்திறமைக்குஎத்துணை நுண்ணுணர்ச்சிவேண்டுமென்பது நுணுகி நோக்கினார்க்கே புலப்படும் என்க. இன்னும்,

ஒரு தாய், தன்குழந்தைக்குப் பால்முதலிய உணவையூட்டுங் கால், வீட்டுமுற்றத்திலாதல் (செல்வர்வீட்டுமுற்றங்கள் மணல் பரப்பப்பட்டிருக்கும்) வீட்டுச் சாலைகளினாதல் அக்குழந்தையை உலாவி விளையாடவிட்டு ஊட்டுவாள். செல்வர்வீட்டுப்பிள்ளை களுக்குச் செவிலியர் ஊட்டுவதும் உண்டு. ஊட்டுங்கால் அக் குழந்தை ஒருதரம் உண்ணும்; பின் சென்று விளையாடும். தாய் புறஞ்சென்று அழைக்க மீட்டும் வந்து ஒருதரம் உண்ணும். இப் படி அக்குழந்தை சென்றுசென்று விளையாடுமிடந்தோறும் தாயும் புறத்தே சென்றுசென்று ஊட்டுவாள். இப்படி ஊட்டும்பொழுது விளையாட்டுச்சிந்தையினால் அக்குழவி வேண்டாது மறுப்பதும் உண்டு. மறுக்கும்போது தாயானவள் என்கண்ணே! மணியே! அரசே! இன்னும் ஒருதரம் உண்ணென்று இன்மொழிகூறியும் உண்பிப்பாள். அம்முறை உண்டு மறுமுறைவேண்டாதாயின் கண்ணே! எனக்காக ஒருதரம் உண்ணென்று ஊட்டுவாள். இப்

படிப் பலரைக் கூறி உண்பிப்பதும் உண்டு. இப்படிக் கூறி உண்பிக்கவும் உண்ணாது மறுக்குமாயின் தாய் சிறிது சினமுடையாள்போலக் காட்டித் தன்கையில் வைத்திருக்கும் (அடித்தால் நோகாதபடி) புடைப்பாகச்சுற்றிய பூவொத்த மெல்லிய தலையையுடைய சிறு கோலான் மெல்லப் புடைத்துப் பயமுறுத்தி உண்பிப்பாள். சில குழந்தைகள் அவ்வடிக்கு அகப்படாது பாய்ந்து ஓடுவதும் உண்டு. ஓடுங்கால் தன்னைப்பற்றும்படி பின்னே தாய் ஓடிவரின் அத்தாய் இளைப்படையும்படி அவள் கைக்கு அகப்படாது சுற்றி ஓடித்திரிவதும் உண்டு. இவ்வியல்புகளையெல்லாம் சங்கச்சான்றோர்கள் தம் செய்யுள்களில் அங்கங்கே அமைத்துப் பாடியுள்ளார்கள். அவற்றின்சுவையை உணரும்படி அச்செய்யுள்களை இங்கே எடுத்துக் காட்டுதும். அவை,

"தெறுகதிர் ஞாயிறு............
......................தேம்பெய்
தளவுறு தீம்பா லலைப்பவு முண்ணாள்
இடுமணற் பந்தரு ளியலு
நெடுமென் பணைத்தோண் மாஅ யோளே." (அகம்—௧௬)

"அகலறை மலர்ந்த..............
....................தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி
ஈனுத் தாயர் மடுப்பவு முண்ணாள்
நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமு முள்ளாள் பொய்ம்மருண்டு."

(அகம்—௧௦௫)

(மண்டை - உண்கலம். ஈனுத்தாயர் - செவிலியர்.)

"அணங்குடை முந்நீர்..................
..........................................
தேங்கலந் தளைஇய தீம்பா லேந்திக்
கூழை யுளர்ந்து மொழிமை கூறவு
மறுத்த சொல்ல ளாகி
வெறுத்த வுள்ளமோ டுண்ணு தோளே." (அகம்—உ௦௭)

(தேம் - தேன்; கண்டசருக்கரையுமாம். கூழை - மயிர்.)

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்
றரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரீஇமெலிந் தொழியப் பந்த ரோடி
யேவன் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி." (நற்றிணை—௧௪௩)

என்பன.

இன்னும் யாதாயினும் ஒருணவுப்பொருளைத் தன்கையிற் கொண்டு ஒரு குழந்தை வீட்டின்வெளியே வரக்கண்டால் மரத்தி லிருக்குங்காக்கை பறந்துவந்து அவ்வுணவுப்பொருளை அக்குழந் தைகையினின்றும் பறித்துக்கொண்டுபோகும். அப்பொழுது அக்குழந்தை கல்லென்று அழுது தன் கைகளால் வயிற்றில் அடித் துக்கொள்ளும். இது இன்றும் நிகழும் இயல்பு. அதுபோலவே ஒருவேட்டுவச்சேரியிலே ஒரு சிறு மலையிலுள்ள ஒருகுடிலின்வாயி லில் ஒரு பெண்குழந்தை உண்ணும்படி பாத்திரத்தோடு தன் கையில் வைத்திருந்த பாலை அவ்வாயின்முற்றத்தைவிட்டுப் போகாது ஒரு வேங்கைமரக்கிளையில் மறைந்திருந்த ஒரு வலிய குரங்குக்குட்டி வந்து அப்பாத்திரத்தோடு பறித்துக்கொண்டு போக, அதனால் அக்குழந்தை மழைபோலக் கண்ணீர்பெருக அழுது, தன்கைகளால் விரல்சிவக்கும்படி பலமுறை அடித்துக் கொண்டது. அவ்வியல்பினை, ஒருபுலவன்,

"புன்றலை மந்திக் கல்லா வன்பறழ்
குன்றுழை நண்ணிய முன்றிற் போகா
தெரியகைந் தன்ன வீததை யிணர
வேங்கைப் படுசினைப் பொருந்திக் கைய
தேம்பெய் தீம்பால் வௌவலிற் கொடிச்சி
யெழுதெழில் சிதைய அழுத கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயின்
மாரியங் கிடங்கி னீரிய மலர்ந்த
பெயலுறு நீலம் போன்றன விரலே
பாஅ யவ்வயி றலைத்தலி னுனு
தாடுமழை தவழுங் கோடுயர் பொதியி

ஞெங்கிருஞ் சிலம்பிற் பூத்த
காந்தளங் கொழுமுகை போன்றன சிவந்தே."

என்று தன்செய்யுளில் அமைத்துக்காட்டுதல் காண்க. இதில் அழுகைமிகுதியையும் வயிற்றில் பலதரம் அடித்துக்கொண்டமை யையும் புலப்படுத்திக் கொடிச்சியின் பேதைமைமிகுதியையுணர்த் தும் நோக்கத்தினால் உவமைகள் புணர்த்தப்பட்டனவென்க. இவ்வியற்கைநவிற்சி செயற்கைப்புனைவோடுங் கூடிவந்ததென்க.

இனிச் செயற்கைப்புனைவிற்குச் சில செய்யுள் காட்டுதும்:— கடலின்கரையிலே நீர் தன்னிலையிலிருந்தோடி வற்றிய அள்ளற் சேற்றிலுள்ள மீன்களையருந்தும்படி ஆயிரக்கணக்கான நாரைகள் அக்கரையிலுள்ள மணன்மேட்டிலே நிரையாகவிருக்கும். அவை கள் நிரையாகவிருப்பதை நோக்கும்போது அரசர்களது படை களின் அணிவகுப்புப்போலக் காணப்படும். இவ்வியல்பினை ஒரு புலவன் தன்செய்யுளில்,

"நீர்பெயர்ந்து மாறிய செறிசேற் றள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த வினக்குருகு
குப்பை வெண்மண லேறி யரைசர்
ஒண்படைத் தொகுதியி னிலங்கித் தோன்றும்."

என்று படம்பிடித்துக்காட்டுகின்றான். இங்கே குருகுகளின் பன்மையையும் அவைகள் அணியாகவிருந்தமையையும் விளக்கு தற்கே 'அரைசரொண்படைத்தொகுதியின்' என உவமை புணர்த் தப்பட்டது. குருகுகள் குப்பைவெண்மணலேறித் தோன்றும் இயல்பை உவமையான் விளக்கலின் இது செயற்கைப்புனைவே யாம். இங்கே நாரைகளினிருப்பை விளக்கற்குப் படைத்தொகுதி யை உவமைகாட்டிய புலவனின் நுண்மதி மிக வியக்கற்பாலதே யாம். ஆயிரக்கணக்கான நாரைகள் வரிசையாகவிருக்குமிருப்பு, படையின் அணிவகுப்புப்போலத்தோன்றும். இவ்வியல்பின் உண்மையை இப்பொழுதும் சில கடற்கரையிற் காணலாம்.

இன்னும், ஒருபெண்ணின்கொங்கைகளைத் தாமரையின் போரும்பாகவும், அவள்முகத்தைச் சந்திரனாகவும், அம்முகமாகிய சந்திரனின் தோற்றத்தினாலே அவ்வரும்புகள் விரியாமலிருப்ப தாகவும் புனைந்து, அப்புனைவைத் தலைவன்கூற்றாகவைத்து,

"வண்ணமுலைப் பொற்று மரைமுகுளம் வீறழிந்து
கண்ணெகிழா வண்ணங் கருதியோ—தண்மதியை
மால்வைத்த மாநிதிவண் கோளூரில் வாணுதாஅல்
மேல்வைத்தான் மேனுள் விதி." (மாறனலங்காரம்)

என்னுஞ்செய்யுளில் ஒரு புலவனமைத்து, அதில் கொங்கைகளின் இளமைத்தோற்றத்தையும் வடிவையும் முகத்தினழகையும் வியப்பதற்காக, அக்கொங்கைகளாகிய தாமரையரும்புகளுக்கு இயல்பாக அமைந்த குவிவை, முகமாகிய சந்திரனுல் ஏற்பட்டதாகக் கற்பித்து, உருவகத்தையங்கமாகக்கொண்ட தற்குறிப்பேற்ற அணியாகக்கூறியதும் மிகச் சுவைபயத்தல் காண்க.

இனி இயற்கைநவிற்சியும் செயற்கைப்புனைவும் ஒப்பச் சுவை தருமென்பதை உணர்த்துமாறு, இரண்டும் ஒருங்கமைந்த ஒரு செய்யுளை இங்கே உதாரணமாகக் காட்டுதும்.

"அறைகழற்சிலைக் குன்றவ ரகன்புனங் காக்கும்
பறையெடுத்தொரு கடுவனின் றடிப்பது பாராய்
பிறையையெட்டினள் பிடித்திதற் கிதுபிழை யென்னுக்
கறைதுடைக்குறு பேதையோர் கொடிச்சியைக் காணுய்." (கம்பர்)

இச்செய்யுளின் முதலிரண்டடிகளினும், மலைவாணர்கள் தினைப்புனத்தைக் காக்கும்படி அடிக்கும் பறையை, அவர்கள் இல்லாதசமயம்பார்த்து ஒரு குரங்கு தானும் எடுத்து அடிக்குமியல்பினைக் கூறியும், மற்றையவடிகள் இரண்டிலும், அம்மலையில்வாழும் பேதைமையுடைய ஒரு வேட்டுவமகள் அம்மலையின்மேற்றோன்றுகின்ற பிறையை(தன்னுதலோடு ஒப்புக்காணுமாறு) எட்டிப்பிடித்து அதிலுள்ள கறையை இதற்கு இது இருப்பது பிழையாகுமென்று அதைப்போக்குமாறு துடைத்து நிற்பதாக அம்மலையின் உயர்வைச் சிறப்பிக்குமாறு புனைந்துகூறியும் முறையே இயற்கைநவிற்சியும் செயற்கைப்புனைவுமாகச் சுவைபடச்செய்திருத்தல் காண்க.

பிழை - குற்றம். பிந்திய இரண்டடிகளும் உயர்வுநவிற்சி, உவமை, மயக்கம் என்னும் அணிகள்தோன்ற அமைக்கப்பட்டுள்ளன. உவமை குறிப்பாற் கொள்ளப்படும்.

---

1941ஆ மேமீ 17௳ (விஷுஆ வைகாசிமீ 4௳)
மாலை 2½மணிக்கு, இராமநாதபுரத்தில் மஹாராஜா அவர்கள்
அரண்மனையில்கூடிய மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்
காரியநிர்வாகஸபையில் முடிவுசெய்யப்பெற்ற
தீர்மானங்களின் விவரம்.

---

1. மாட்சிமைதங்கிய கனம் இராமநாதபுரம்ராஜா R. ஷண்முக ராஜேசுவர நாகநாதசேதுபதி மஹாராஜா அவர்கள்
—அக்கிராசனாதிபதி.

2. மகா-ா-ா-ஸ்ரீ T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் B.A., B.L. M.L.C.
—உப-அக்கிராசனாதிபதி.

3. ,, V. சுந்தரமையரவர்கள் B.A., B.L.

4. ,, N. R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரவர்கள் B.A., B.L.

இவர்கள் வந்திருந்தார்கள்.

தீர்மானங்கள்.

---

I. 1941-ஆம் ஆ ஏப்ரல் மீ முடியஉள்ள சங்கமாபீசு வரவு செலவு கணக்குகள் அங்கீகரிக்கலாயின.

II. மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினராகவேண்டுமெனக் கோரிய டெபுடிகலெக்டர் மகா-ா-ா-ஸ்ரீ K. ரெங்கஸாமி முதலியார், B.A. அவர்களையும், கொல்லம் பிரதான டிஸ்டிரிக்ட்முன்சீப் மகா-ா-ா-ஸ்ரீ K. S. கோபாலையர், B.A., B.L. அவர்களையும் அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

III. (a) மதுரை M. R. C. C. Bank-ல் வட்டிக்குக் கொடுத்துள்ள Fixed Deposit தொகை ரூ 25,011-5-0யும் இரண்டுவருஷங்களுக்கு, வருஷம் ஒன்றுக்கு ரூ 100-க்கு 3½ வட்டிக்குப் புதுப்பித்திருப்பதை அங்கீகரிக்கலாயிற்று.

(b) மதுரை இந்தியன்பாங்கில் வட்டிக்குக் கொடுத்துள்ள மூன்று Fixed Deposit தொகைகளாகிய ரூ 10,000, மற்றொரு ரூ 10,000, ரூ 5,000 இவற்றை ஷை பாங்கிலேயே ஒவ்வொன்றையும் இரண்டு வருஷங்களுக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ 100-க்கு 3 வட்டிக்குப் புதுப்பிக்கலாமென்று தீர்மானிக்கலாயிற்று.

IV. 1941—1942-ஆம் ஷூ த்துக்குத் தயாரிக்கப்பெற்ற சங்கமாபீசு வரவு செலவு மதிப்புத்திட்டம் (Budget) அங்கிகரிக்கலாயிற்று.

V. சங்கத்தின் வருஷாந்தக்கணக்குகளைப் பரிசோதனை செய்ய மதுரை வக்கில் மகா-ள-ள-ஸ்ரீ R. சேஷையங்கார், B.A., B.L. அவர்களை ஆடிட்டராக நியமிக்கலாயிற்று.

VI. சங்கவருஷோத்ஸவத்தை இராமநாதபுரத்தில் நடத்துவதற்கு சமீபமான தேதியைக் குறிப்பிடவேணுமென்று மாட்சிமைதங்கிய கனம் அக்கிராசனாதிபதியவர்களைக் கேட்டுக்கொள்ளலாயிற்று.

VII. சங்கசிப்பந்திகளாகிய செந்தமிழ் உதவிப்பத்திராசிரியர் T. K. இராமாநுஜையங்கார் 15 நாட்கள் விசேஷலீவு பெற்றுக்கொண்டதற்குப் பிடித்திருக்கிற சம்பளத்தையும், உதவிப்பண்டிதரும் கலாசாலை உபாத்தியாயருமான R. வீரராகவையங்கார் $14\frac{1}{2}$ நாட்கள் விசேஷலீவு பெற்றுக்கொண்டதற்குப் பிடித்திருக்கிற சம்பளத்தையும் கொடுக்கும்படி சாங்கிஷன் செய்யலாயிற்று.

R. Shanmuga Rajeswaran,

அக்கிராசனாதிபதி.

---

௳

# கம்பராமாயணசாரம்

[தமிழ்ப்பெருங்கவி, முதுபெரும்புலவர்,
ஸ்ரீ. ராவ்சாகிப் வே. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.]

உகூரு-ஆம் பக்கத் தொடர்ச்சி.

## நிகும்பலையாகப்படலம்

போரில் வெற்றிபெறுதற்கு நிகும்பலையென்ற இடத்தில் இந்திரசித்து செய்த யாகத்தை இலக்குமணன் சிதைத்ததைக் கூறுவது.

### விபீடணனை இராமன் தழுவி நன்றிகூறல்

[ 'சீதாதேவி, சேமமாயிருக்கிறாள்; இந்திரசித்து, நிகும்பலையில் யாகஞ்செய்யப்போயிருக்கின்றான்' என்று விபீடணன் சொல்லக் கேட்ட இராமன், (துன்பம்நீங்கி யின்பம் ஓங்க) விபீடணனை உடம் புடனுடம்பேயன்றி உயிருட னுயிரும் ஒன்றத் தழுவி, எங்களுக்கு நேரும் துன்பங்களைத் தொலைத்தற்கு நீ இருக்கின்றாய்; தெய்வம் இருக்கின்றது; அனுமான் இருக்கின்றான்; நாங்கள்செய்த தவமிருக் கின்றது; வலிமையும் இருக்கின்றது; ஆதலால், எங்கள் துன்பம் நீங்குவது ஒரு பெரியகாரியமோ ?* என்று (நன்றி) கூறினான்.

### யாகத்தைத்தடுக்க, இலக்குமணனை விடுக்கும்படி விபீடணன் வேண்டல்

விபீடணன், 'இந்திரசித்து யாகத்தைமுடித்தானானால், அவனை யாரும் வெல்லமாட்டார். அவன் யாகமுடியாமல் வாழ்வுமுடியும்படி

* தீர்வது பொருளோ துன்பம்? நீ உளை, தெய்வம் உண்டு,
மாருதி உளன், நாம் செய்த தவம் உண்டு, வலியும் உண்டால்,

தீர்வது - நீங்குவது. பொருள் - (பெரிய) காரியம். உளை - இருக் கின்றாய். மாருதி - அனுமான். ஆல் - ஆதலால். 'துன்பம் தீர்வது பொருளோ எனக் கொண்டுகூட்டுக.

செய்ய, இளையபெருமாளை என்னுடன் அனுப்புதல்வேண்டும்' என்றான்.

### இராமன் இலக்குமணனை அனுப்புதல்

இராமன், இலக்குமணனைநோக்கிப் 'பிரமாத்திரம் நாராயணாத்திரம் பாசுபதாத்திரமாகிய பெரிய தெய்வப்படைகளை இந்திரசித்து விடுத்தபோது, விலக்குதற்கன்றி, அவைகளை நீ விடுக்காதிருப்பாயாக. அவன், கைதேர்ந்துள்ள (அதர்மமுறையான) மாயவித்தைசெய்வானாயின், அதனை நீ தருமமுறையான தந்திரத்தால் ஒழிப்பாயாக. அவனினும் விரைவாக நீ அம்புதொடுத்து, அவன் விடுக்கும் அம்புகளை உன் அம்புகளால் தடுத்து, அவன் மெலிவுற்றசமயம்பார்த்து, மருமத்தானத்தில் உன் அம்பைச் செலுத்தி உயிர்வாங்குவாயாக' என்று போர்செய்தற்குரிய உபாயங்களையெல்லாம் உரைத்தான். பின்பு, 'தன் பெருமை தானறியாத் தன்மையனான திருமால் கையில் தாங்கியிருந்த இந்த வில்லை வாங்கிக்கொள்' என்று கூறி அந்த வில்லையும், அந்தத் திருமால் முதுகிற் கட்டியிருந்த அம்பறாத்தூணியையும், கவசத்தோடு கொடுத்தான். கொடுத்தவன், கூறவேண்டிய உறுதிகள் பலவும் கூறி, 'வெற்றிபெறுவாய்' என்று வாழ்த்தித் தழுவி 'அனுமான் முதலிய வானரத்தலைவருடன் செல்வாயாக' என்று கூறி விடைகொடுத்தான்.

### தமயன், தம்பியின் பிரிவாற்றாமை

மேலே விண்ணினின்று தண்ணீர்மாரிபொழியும் மேகம், இறங்கிவந்து, கீழே மண்ணில்நின்று, கண்ணீர்மாரிபொழிவது போன்று, பிரிவாற்றாமையால் அழுதுவருந்தும் இராமனை, இலக்குமணன், வலங்கொண்டு வணங்கி, 'இந்திரசித்தின்தலையைக் கொண்டுவருவே'னென்று கூறித் திரிபுரங்களைத் தீக்கச் சிரிச்செல்லும் சிவன்போலப் போர்செய்தற்குப் புறப்பட்டுப்போனான். உடம்பைப் பிரிந்து உயிர்போனாற்போலத் தன்னைப்பிரிந்து தம்பி

போர்செய்தற்குப் போனபோது, இராமன், விசுவாமித்திரமுனிவன் வேள்வியைக்காத்தற்குத் தான் பிரிந்தபோது வருந்திய தசாதனை ஒத்தான்.*

நிகும்பலையாகத்தைக் காக்கும் இராட்சசசேனையை
வானரசேனை காணுதல்

இலக்குமணனோடு சென்ற சேனாபதி முதலிய எல்லா வானரரும், கொள்ளிக்கட்டைகளைக் கையிற்கொண்டவராய் நிகும்பலையை அடைந்தார்கள். அங்கே, அவர்கள், உலகையுட்கொண்ட பெருமாள், சிறிய ஆலிலையிலிருந்ததுபோலப் பெரிய இராட்சசப் படை, சுருங்கிய இடத்துக்குள் நெருங்கியிருக்கக் கண்டார்கள். இந்திரசித்தினுடைய யாகத்தீ, நடுவே உள்ளதாக, அதனைச் சூழ்ந்திருந்த இராட்சசசேனை, வடவாமுகாக்கினி நடுவேயுள்ள கடலைப் போன்றது. தலைமேற் செம்பட்டைமயிருடைய அந்தக் கரிய இராக்கதசேனை, இராமன் ஏவிய அக்கினியத்திரம் தன்மேல் எங்கும் சுடர்விட்டெரியும் கடலையும் ஒத்தது. அந்தச் சேனை, இரகசியமாகச்செய்யும் யாகத்தைக் காத்தற்குச் சூழ்ந்திருந்ததனால், அந்தச் சேனையில் விற்கள், நாண்தெறிக்கப்படாமையால், மேகத்தினிடத்தே (ஒலிசெய்யாததாக) உள்ள இந்திரவில்லை ஒத்தன; சங்குகள், முழக்கப்படாதனவாய்க் கடற்சங்குகளைப் போன்றன; முரசுகள், அறையப்படாமையால், இடிக்காத மேகங்கள் நேர்ந்தன.

போர்

நிச்சத்தமாயிருந்த இராக்கதசேனையைக் கண்டவுடனே, வானரசேனை, வானம் கிழிந்திடும்படி ஆரவாரம்செய்தது. இராட்சசசேனை, எதிர் ஆரவாரம்செய்தது. வானரர், இராக்கதசேனைமேல்

---

* தான்பிரி வின்றிலாத தம்பி,வெங் கடுப்பிற் செல்லா
ஊன்பிரி வின்றிலாத உயிரென மறைத லோடும்
வான்பெரு வேள்வி காக்க வளர்கின்ற பருவநாளில்
தான்பிரிந் தேகக் கண்ட தயரதன் றன்னை யொத்தான்.

கடுப்பு - வேகம். செல்லா - சென்று. வான் - உயர்ந்த. வளர்கின்ற பருவம், காளைப்பருவத்தைக் குறித்தது.

மலைகளை எறிந்து மூடினர். அரக்கர் வானரர்மேல் அம்புமாரி பொழிந்தனர். வானரர் எறிந்த மலைகளாலும் மரங்களாலும் இராக்கதருடைய வில்லும் மழுவும் பல்லும் தலையும் தரையில் விழுந்தன. இராக்கதர் மழுக்களையும் எழுக்களையும் கொழுக்களையும் வீசியெறிய, வானாருடைய வாலும் காலும் கையும் தலையும் உடலும் தரையில் விழுந்தன.

விபீடணன், இலக்குமணனைநோக்கி, 'இங்கே நின்று தாமதித்தல் முறையன்று. இந்தச்சேனையாற் காக்கப்பட்ட வேள்வியைச் சிதைக்கவில்லையானல், என்றும் வெற்றிபெறமாட்டோம்' என்றான். உடனே, இலக்குமணன் இராக்கதர்சேனையூடே சென்று அம்புகள் பொழிந்தான். அதனால், அரக்கர்கள், தம் இலங்கையூர்க்குப் போகாமல், எமனூர்க்குப் போனார்கள்.* எண்ணிறந்த குதிரைகளும் தொகைமிக்க யானைகளும் கொன்று குவிக்கப்பட்டன. தேர்கள் தொலைக்கப்பட்டன.

படுகளவருணனை

யானைகள் காலூன்றியதனால் உண்டாகிய குழிகளிலே கிடந்த இராக்கதர்களுடைய செம்பட்டைமயிர்த்தலைகள் காணப்படும் காட்சி, ஓமகுண்டங்களில் எரியும் ஓமத்தீத்தோற்றத்தை ஒத்தது. இலக்குமணன் எய்த அம்புகளாற் பீறப்பட்டு இரத்தம்நிறைந்த வயிறுகளோடுகிடக்கும் யானைப்பிணங்கள், (செங்கலங்கற் புது வெள்ளம் பெருகிநிறைந்த) சுனைகளையுடைய மலைகள்போலக் காணப்பட்டன. ஒளியுள்ள பல அம்புகள் தைக்கப்பட்டுத் தரையிற் கிடந்த மணிகளிழைத்த கிரீடங்கள், மின்மினிக்கூட்டம் மொய்க்கப்பெற்ற புற்றுக்கள்போன்றன. இரத்தப்பெருக்கிலே (காற்றால் அலைக்கப்பட்டு) விழும் கொடிச்சீலைகள் (நீர்மடுத்தற்குக்) கடலிற் படியும் மேகங்கள்போன்றன. அம்பினாற் காம்பறுப்புண்டு இரத்தப்பெருக்கில் அழுந்திய குடைகள் (கேது என்னும்) செம்பாம்பு

---

* உக்காரவ் வரக்கர்த மூரொழியப்
புக்கார்நம னூருறை தென்புலமே.

உக்கார் - செத்தார். புக்கார் - புகுந்தார். தென்புலம் - யமலோகம்.

விழுங்கிய பூரணசந்திரனை (ஒவ்வொன்றும் தனித்தனியே) ஒத்தன. கால்களும் கைகளும் கணையால் அறுப்புண்டு செத்து, இரத்த ஆறு செல்லும்வழியே மிதந்துசெல்லும் யானைகள், நீர்மேற்செல்லும் மரக்கலங்களைநேர்ந்தன. முனையிலே நெருப்பையுடைய அம்புகள் தாக்கத் தம்மேலுள்ள (அம்பாரிமுதலிய) அலங்காரங்கள் தீப்பற்றி எரியப்பெற்ற யானைகள், மூங்கிற்காடு எரிகின்ற மலைகளை ஒத்தன.

### யாகம் அழிதல்

இலக்குமணன் அம்புகளால் அறுக்கப்பட்டதலைகளும் உடல்களும் அந்தப் பாணங்களோடு ஓமகுண்டத்தையுற்றன. சில தலைகளால் தாக்குண்டு, பூரணகும்பங்கள் தகர்ந்தன. இரத்த ஆறுகள் ஓடிவந்து ஓமத்தீயை அவித்தன. அம்புகள் அறுத்த அரக்கர்கைகள் பிடித்திருந்த வாளோடுசென்று வீழ்ந்ததனால், யூபத்தம்பத்தில் ஓமஞ்செய்தற்குக் கட்டியிருந்த எருமைகளும் ஆடுகளும், வெட்டப்பட்டுவிழுந்தன. நெய்யும் மதுவும் பொரியும் நிறைந்த மூடிகளையுடைய சாடிகள் ஆடிவந்த (தலையற்ற உடல்களான) கவந்தங்களால் உடைந்தன.

### இந்திரசித்து, தன்சேனையின் நிலைகுலைவைக் காணல்

இவ்வாறு யாகம் அழிந்தபோது, இந்திரசித்து, எட்டுத் திக்குக்களையும் சுற்றிப்பார்த்து, வேகமாக வீசுகின்ற காற்றினால் சின்னபின்னப்பட்ட சோலைபோல, இராக்கதசேனை தாறுமாறாக நிலைகுலைந்ததன்மையைக் கண்டான். எங்கும் பிணமலைகளும் இரத்தக்கடல்களும் அவன்கண்களைக் கவர்ந்தன. ஒருவன் அம்பினால் நூறுநூறுயிரகோடியரக்கர்கள் கூறுகூறாகத் துண்டிக்கப்பட்டுக் குவியல்குவியலாகக் கிடப்பதைக் கண்டான். இறவாதெஞ்சிய இராக்கதர் அஞ்சி உடல்நடுங்கி, நாவுலர்ந்து, அவனை அடைவாராயினர்.

### இந்திரசித்தின் மனவருத்தம்

அப்போது அவன் மந்திரஞ்செபித்தலை மறந்து, கடல்போன்ற பெருஞ்சேனை மிக விரைவாக அழிந்ததென்பதையும் அழிந்ததற்குக் காரணம் ஒரு தனிமனிதன் வில்வன்மையென்பதையும் நினைந்து, துன்பமும் கோபமும் ஏககாலத்தில் உண்டாக மனம் வெதும்பினான்.

### இந்திரசித்து மனம்வருந்தித் தனக்குத்தானே கூறுதல்

'என் மானம் பாழ்பட்டது! யான் வகுத்த வேள்வி வீணனது! மௌனம் ஒழிந்தது! சேனை அழிந்தது! இன்னமும் வேள்வி செய்யமுயலல் சிறுபிள்ளைத்தனம். ஓமத்தீ அவிந்தது, இன்று எனக்கு வெற்றி அடங்கியதற்கு அறிகுறியாம். (சீ! இது என்ன நினைவு.) இதுகிடக்க. மனிதர்வலிமைக்கு என்வலிமை குறைந்த தென எண்ணுதல், ஏழைமைப்பாலதாகும். (வேள்விபோனுல் என்) தோளுமா போய்விட்டது? வேள்வி போயொழிந்ததை நினைந்து சிந்தைநொந்து தேய்வேனுனல், "இவன் மனிதருக்கு ஆற்றமாட்டாதவன். இவன்வலிமை இந்திரனிடத்தேதான் செல்லும்" என்று தேவர்கள் சிரித்துப் பழிப்பார்கள்' என்று தனக்குள்ளே கூறினன்.

### இலக்குமணனும் வானரரும் இராக்கதசேனையைத் தாக்குதல்

இவ்வாறு, அவன் கூறியபோது, வானரர்கள், மலைகளையும் மரங்களையும் யானைப்பிணங்களையும் எறிந்தார்கள். இராக்கதப் படை, நிலைகெட்டுச் சிதறியது. அந்த மலை முதலியவற்றிற்கும் இலக்குமணன் அம்புகளுக்கும் அஞ்சி, இராக்கதர், ஒதுங்கினர். ஒருவருக்குக்கீழ் ஒருவர் பதுங்கினர்; அம்புதுளைக்கப்பட்டுக் குடல்கள் பிதுங்கினர். இராக்கதசேனைமீது இலக்குமணன் எய்த அம்புகளோடு வானரர்வீசிய மலைக்ள் வீழ்தல், மழைத்தாரைகளுடன் மேகங்கள் கடலிற் படிதலை ஒத்தது.

### அனுமான் இந்திரசித்தையணுகிப் பரிகாசவார்த்தைகள் பகர்தல்

அனுமான், மரங்கொண்டுதாக்கி, இராக்கதப்பெரும்படையைச் சின்னபின்னமாக்கிச் சிதறச்செய்து, இந்திரசித்தையணுகி, அவனுக்குக் கோபம் மூளுமாறு கூறுவானுயினன்:—'சீதாதேவியைக்கொல்லாதேயென்று நான் இரந்துகூறிய நல்லவார்த்தைகளைக் கேளாயாய், வாளால் அவளை வெட்டினது, யாதாயிற்று? குபேரன் கொடுத்த புட்பகவிமானத்திலே வடதிசைநோக்கிச் சேனையோடு சென்றது யாதாயிற்று? நாங்கள் க்ாணுதபடி இரகசியமாக யாகசாலையைச்சூழக் காவலாகச் சேனையைச் சக்கரவியூகமாக வகுத்து

வைத்ததை நாங்கள் கண்டதுண்டோ, இல்லையோ? அச்சேனை இருக்குமிடம் தெரிந்திடாதபடி வில்நாண்தெறித்தல், முதலியவை செய்யப்படாதிருந்தும் அவ்வோசைகளை நாங்கள் கேட்டிலேமோ? அயோத்திக்குச்சென்றீரே; அங்கே பரதாழ்வானைச் சுற்றத்தோடுந் தொலைத்து எப்போது திரும்பிவந்தீர்? திரும்பிவந்து செய்த வேள்வி முடிந்ததோ? இலக்குமணப்பெருமாள் எய்த அம்புகள் உடம் புள்ளே பாய, வாய்வழியாகவும் காதுவழியாகவும் கண்வழியாகவும் இரத்தம் வடிய, இலங்கைக்குட்புகுந்து திரும்பி, வஞ்சகமாக மறை வாய்நின்று, மாயப்போர்செய்வதெல்லாம் இன்றோடு மாண்டு விடும்.' ]

159 பாசமோ மலரின் மேலோன் பெரும்படைக் கலமோ பண்டை
ஈசனர் படையோ மாயோ னேமியோ யாதோ வின்னம்
வீசநீர் விரும்புகின்றி ரதற்து[1] நாம் வெருவிச் சாலக்
கூசினேம் போதும் போதும்[2] கூற்றினர் குறுக வந்தார்.

கொண்டுகூட்டு: பாசமோ, மலரின்மேலோன் பெரும்படைக்கலமோ, மாயோன்நேமியோ, இன்னம் யாதோ நீர் வீச விரும்புகின்றீர்? அதற்கு நாம் வெருவிச் சாலக் கூசினேம். போதும், போதும். கூற்றினர் (உம்மைக்) குறுகவந்தார்.

பொருள்: நாகபாசமோ, பிரமாத்திரமோ, பாசுபதப் படையோ, சக்கராயுதமோ, இன்னம் எந்த ஆயுதமோ நீர் வீச விரும்புகின்றீர்? அதற்கு நாங்கள் வெருண்டு மிகவும் அஞ்சினோம். (இது வரை வீசியது) போதும், போதும். (இனி வீசாதபடி உம் முடைய உயிரைக் கொண்டுபோக) நமனர் கிட்டவந்துவிட்டார்.

நேமி - சக்கராயுதம். வெருவல் - வெருளல். சால - மிக. கூசுதல் - அஞ்சுதல். கூற்று - எமன். குறுக - சமீபமாக.

'வெருவிச் சாலக் கூசினேம்' என்றது, 'நாங்கள் வெருவினே மல்லேம், சிறிதும் அஞ்சினேமல்லேம்' என்ற பொருள்படப் பரி காசமாகக்கூறியபடி. இவ்வாறு, பிறகுறிப்புவகையாக, ஒருகருத் தை அதற்கு மாறான சொற்களாற் புலப்படுத்தல், எதிர்மறைப் பொருளைக் குறிப்பாலுணர்த்துவதாகிய எதிர்மறையிலக்கணையாம்.

கருத்துக்குச் சொல் மாறுபட, ஒருகவிச் சக்கரவர்த்தி (கம்பர்) பரிகாசநிலைபற்றி 'வெருவிச்சாலக்கூசினேம்' என்றது, மற்றொரு கவிச்சக்கரவர்த்தி (செயங்கொண்டார்) இன்பநிலைபற்றி,

'விடுமினெங்கடுகில் விடுமி'னென்றுமுனி வெகுளி மென்குதலை துகிலினைப்
பிடிமினென்றபொருள்விளையநின்றருள்செய்பெடைநலீர்கள்கடைதிறமினோ.*

என்ற கலிங்கத்துப்பரணித் தாழிசையை நினைவுகூரச்செய்கின்றது.

பாடபேதம்: [1]விரும்புகின்றதற்கு. [2]நும்மைக்.

[ 'நீர்† வரங்களும் தெய்வப்படைக்கலங்களும் பெற்றிருப்பதும் தேகபலமுடைமையும் நிலையானவையல்ல. உம்முடைய தலைகளைத் துண்டப்படுத்தி உயிர்வாங்கவந்திருக்கின்றோம். மும்மூர்த்திகளும் உமக்குத் துணையாகவந்து உதவினாலும், நீர் சாதல் திண்ணம். அதற்கு அறிகுறியாக உமக்கு இடப்பக்கம் துடிக்கின்றதன்றோ? இனி நீர் உயிர் தரித்திருப்பீரோ? சொல்லும்.'

'இலக்குமணப்பெருமாள், உன்னைக் கொல்வதாகச் சபதஞ் செய்து, உனக்கருகேவந்து உன் சேனை முழுவதையும் கொன்று, உன்னைப் 'போர்செய்ய வா' என்று அழைக்கின்றான். மூன்றுலகத்தையுங் காக்கும் முதல்வன் தம்பி உன்னுடன்செய்யும் போரைக் காணுதற்குத் தேவலோகத்தாரும் மற்றைய பலவேறு லோகத்தாரும் காத்துநிற்கின்றார்கள். இனி எதற்காக இறைப்பொழுதேனும் தாமதிக்கின்றாய்? நீ சாதல் உண்மை?' என்றான்; தருமத்தைக் காப்பான் (ஆன அனுமான்).‡]

---

* துகில் - சேலை. முனிவெகுளி மென்குதலை - கோபத்தோடுகூறும் மென்சொற்கள். பெடைநல்லீர் - பெண்களே. கடை - கதவு.

† அனுமான் இந்திரசித்தை நீ யென ஏகவசனமாகக் கூறாது நீர் எனப் பருவசனமாகக் கூறுவது, மரியாதைப்பன்மையன்று, பரிகாசப்பன்மையாம்.

‡ மூவகை உலகம் காக்கும் முதலவன் தம்பி பூசல்
தேவர்கள் முனிவர் மற்றும் திறத்திறத் துலகஞ் சேர்ந்தார்
யாவருங் காண நின்றார் இனியிறை தாழ்ப்ப தென்னே?
சாவது சரத மன்றோ? என்றனன் தருமங் காப்பான்.

பூசல் - போர். திறத்திறத்து உலகம் - பலவகைப்பட்ட உலகங்கள். இறை - இறைப்பொழுது. தாழ்த்தல் - தாமதித்தல். சரதம் - உண்மை.

## இந்திரசித்தின் மறுமொழி

இந்திரசித்து, இதன்முன் நிகழ்ந்த போர்களெல்லாவற்றிலும் இறந்த நீங்கள் கருடனாலும் சஞ்சீவிமருந்தினாலும் சாவினின்று நீங்கித் திரும்பிப் பிழைத்தபோதெல்லாம் முன் செத்ததை மறந்து விடுகின்றீர்களே? இப்போது நீங்கள் சாதற்காக என்னைப் போருக் கழைக்கின்றீர்கள். இத்தனைபேரும் இறந்தபின் பிழைக்கச்செய்யும் மருந்தை வைத்துக்கொண்டிருக்கின்றீர்களோ? (அது இனிவரும் போரில் பயன்படாது). ஏ குரங்குகளே! நான் உங்களைக் கொல்லுவதை விலக்குதற்கு இலக்குவனாகட்டும் இராமனாகட்டும் வந்து விலக்கட்டும். அவர்களால் விலக்கமுடியாதபடி குரங்குக ளெல்லாவற்றையும் கூட்டங் கூட்டமாகக் கொன்றிடுவேன். என் னுடைய வெற்றியையும் மனிதருடைய துன்பத்தையும் வானவ ரும் முனிவரும் காண்பார்கள். ]

160 யானுடை வில்லு மென்பொற் றேள்களு மிருக்க வின்னம்
ஊனுடை யுயிர்க ளியாவு முய்யுமோ வொழிப் பிலாமல்[1]
கூனுடைக் குரங்கி னேடு மனிதரைக் கொன்று சென்றவ்[2]
வானினுந்[3] தொடர்ந்து கொல்வன்[4] மருந்தினு முய்ய மாட்டீர்.

கொண்டுகூட்டு: 'யான் உடை(ய) வில்லும் என் பொன் தோள்களும் இருக்க, இன்னம் ஊன் உடை(ய) உயிர்கள் யாவும் உய்யுமோ? மனிதரைக் கூன் உடை(ய) குரங்கினேடு ஒழிப்பில்லாமற் கொன்று, (அவர்களை) வானி லும் தொடர்ந்துசென்று கொல்வன். (அப்போது) மருந்தினும் உய்ய மாட்டீர்.

பொருள்: '(யாகம் அழிந்தாலென்ன? மற்றும் எவையும் ஒழிந் தாலுந்தான் என்ன?) என்னுடைய வில்லும் தோள்களும் உள்ளன வாக, இன்னமும் உடம்போடு கூடிய உயிர்களெல்லாம் (என்னாற் கொல்லப்படாமல்) பிழைத்திருக்குமோ? (யான், நிமிர்ந்த) மனித ரைக் கூனற்குரங்குகளோடு விலக்கில்லாமல் (—எந்த மனிதனையும் எந்தக் குரங்கையும் விடாமல், இந்த மண்ணுலகத்திலே) கொன்று (அம்மட்டில் அமையாமல், போரில் இறந்தவர் சென்றடையும் வீர சுவர்க்கமாகிய) விண்ணுலகத்திலும் சென்று (இரண்டாம்முறை) கொல்வேன். (அப்படிக் கொல்லப்பட்டபோது, முன் ஒருமுறை

கொல்லப்பட்டபோது உங்களைப் பிழைப்பித்த) மருந்தினாலும் பிழைக்கமாட்டீர்கள்.

யான் உடை - என்னுடைய. பொன் - அழகு. ஊன் - உடம்பு. உய்தல்-சீவித்தல் - பிழைத்திருத்தல். ஒழிப்பு - விலக்கு. வான் - விண் (உலகம்). மருந்து - சஞ்சீவிமருந்து.

உயிருக்குக் காணப்படும் தூலசரீரமேயன்றி, அத்தூலசரீரத்தினுள்ளேயுள்ள காணப்படாத சூட்சுமசரீரமும் உண்டென்பதும், ஒரு பிராணி இறக்கும்போது, சூட்சுமசரீரத்தோடு உயிர் தூல சரீரத்தைவிட்டுப் பிரிகிறதென்பதும், தத்துவநூற்கொள்கைகள். ஆகவே, அக்கொள்கைகளின்படி, இறத்தலும் கொல்லலும் பிழைப்பித்தலும், முறையே, சூட்சுமசரீரம் தூலசரீரத்தினின்று பிரிதலும், பிரிக்கப்படுதலும், சூட்சுமசரீரம் வேறு தூலசரீரம் வேறென இரண்டாகப்பிரிந்த அல்லது பிரிக்கப்பட்டவைகளை ஒன்றாகச் சேர்த்தலுமாம்.

இக்கருத்தையுட்கொண்டு, உங்களை (இராமலக்குமணரையும் வானரரையும்) இங்கே கொன்றமட்டில் நின்றுவிடாமல், நீங்கள் கொல்லப்பட்டபின்பு செல்லும் வீரசுவர்க்கமான விண்ணுலகத்துக்கும் தொடர்ந்துவந்து, அங்கும் உங்களைக் கொல்வேன். அப்படிக் கொன்றபோது, மண்ணிலேயன்றி விண்ணிலேயும் இருத்தலொழிந்தீராவீராதலால், முன், இறந்தபின் விண்ணிலிருந்த உங்களை மண்ணிற்கிடந்த உங்கள் பிணங்களினுள்ளே சேரச்செய்து உங்களைப் பிழைப்பித்த மருந்து, இனிப் பிழைக்கச்செய்ய மாட்டாதென்பான், 'மருந்தினும் உய்யமாட்டீர்' என்றானென்றார்.

பாடபேதம்: [1] உய்யுமே கழுதுண்ணவே, உய்யுமே யுயிருணவே. [2] நின்ற. [3] வானிலுங், வானிடைத். [4] கொல்வேன்.

[ '"நீ செய்யத்தொடங்கிய வேள்வி முற்றுப்பெறாமல் தவறிவிட்டது. அதனால் நாங்கள் இன்று வெல்வோ"மென்று வீரவாதம் கூறவேண்டாம். அதற்கெதிராக, என் வீரவாதத்தை, உங்களைப் போல வாயினாற் கூறாமல், அம்புகளாற் கூறுவேன். முன் (நாகபாசத்தாலும் பிரமாத்திரத்தினாலும் மாண்டு) இரண்டு வெற்றிகள் எனக்குக் கொடுத்திருக்கின்றீர்கள். (இனி யான் மூன்றாம்முறை முடிவான வெற்றிபெற்று முக்காலும் வெற்றிபெற்றேனாகச் செய்ய

வந்தீர்கள். முன் என் எதிரே உயிரோடுநிற்கமாட்டாமல் மாண்டு மண்ணிற்கிடந்த நீங்கள், இப்போது) என் எதிரே சாகாமல் உயிரோடுநிற்கக்கற்றீர்களோ? திரும்பவும் மாண்டுகிடக்கப்போகிறீர்களோ? மாளாது தப்ப, ஓடிவிடப்போகின்றீர்களோ? (ஓடாது நிற்பீராகில்) நில்லுங்கள். (சற்றே), நில்லுங்கள். (இதோ பொருதற்கு வருகிறேன்)' என்று கூறி, நெருப்பெழ விழித்து, மெய்யிற் கவசம் பூண்டு, கையில் விரலுறையணிந்து, தோளில் அம்பறாத்தூணியைக் கட்டி, இரதமேறி, நாணெறிந்து, குணத்தொனி* செய்தான்.

ஒருகணநேரத்திற்குள்ளே சருவநாசஞ்செய்திடுவானென்று தேவர்கள் கலங்கினார்கள். தேவமாதர் கண்களின்மீது கைகளால் அறைந்துகொண்டார்கள். கலங்கின வானவர்கள், தெளிந்து, 'நாம் முன்செய்த தவத்தினால் யாகம் தவறியது. அது தவறியதனால், இவன் இனிப் பிழைக்கமாட்டான். விதியே இவனைச் சாதற்கு அழைத்துவந்திருக்கிறது. இலக்குமணனுடைய அம்புகளால் இவன் வருந்துவதைக் காண்போ'மென்று ஊக்கங்கொண்டார்கள்.]

161 நாண்டொழி லோசை வீசிச் செவிதொறு நடந்த லோடும்
ஆண்டொழின் மறந்து[1] கையி னடுக்கிய மரனுங் கல்லும்
மீண்டென[2] மறிந்து சோர விழுந்தன விழுந்த மெய்யே[3]
மாண்டன மென்றே[4] யுன்னி யிரிந்தன[5] குரங்கின்[6] மாலை.

கொண்டுகூட்டு: நாண் தொழில் ஓசை வீசிச் செவிதொறும் நடத்தலோடும், (குரங்குகள்) ஆண்தொழில் மறந்து கையின் அடுக்கிய மரனும் கல்லும் மீண்டென மறிந்து சோர விழுந்தன. (அக்குரங்குகள் தாமும்) விழுந்த(ன). குரங்கின்மாலை மாண்டனமென்றே உன்னி இரிந்தன.

பொருள்: (இந்திரசித்து,) நாணைத்தெறித்தலாகிய செயலால் உண்டாகிய ஓசை பரவி(வந்து) காதுகளிற்பட்டவுடனே, குரங்குகள் பயந்துவிட்டதனால், அவைகள் ஆண்களுக்குரிய (பராக்கிரமச்) செயலை மறந்து (இராக்கதர்மீது எறிதற்காக மண்ணினின்று பேர்த்துக்) கைகளில் வரிசையாகக்கொண்டிருந்த மரங்களும் மலைகளும் (பேர்த்தெடுக்கப்பட்ட மண்ணுக்குத்) திரும்பினவாய் (அக்குரங்குகள் அறியாமலே நழுவி) விழுந்தன. (அக்குரங்குகள் தாமும்) விழுந்தன. குரங்குக்கூட்டங்கள், (இங்கே, தாமதித்து

* குணத்தொனி - டங்காரம் - வில்நாணோசை.

நின்றால் இந்திரசித்தின், அம்புகளால் உண்மையாகவே) மாண்டோம் (ஆவோ)மென்றெண்ணிச் சிதறியோடின.

வீசி - பரந்து. கல் - மலை. மீண்டென - மீண்டு - திரும்பி. மறிந்து - திரும்பி. மீண்டென, மறிந்து என்பவை ஒருபொருள்குறித்தவை. உன்னி - எண்ணி. இரிந்தன - சிதறியோடின. குரங்கின்மாலை - குரங்குகளின்வரிசைகள் - குரங்குக்கூட்டங்கள்.

'மறந்து' என்பதற்கும், 'விழுந்தன' 'விழுந்த' என்பவற்றுக்கும் 'குரங்குகள்' என்ற வினைமுதல் வருவிக்கப்பட்டது. 'மீண்டு' எனப் பொருள்படும் 'மீண்டென' என்பது, 'செய்து' எனப் பொருள்படும் 'செய்தென' என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம்.

பாடபேதம்: [1] ஆண்டொழிலுடனே. (மாண்டொழிலென்றும் பிரிக்கலாம்.) [2] மீண்டன. [3] வீழமேன்மேல், விழுந்த மெய்ம்மை. [4]எனவே. [5] இரிந்தது. [6] கவியின்.

## இந்திரசித்தும் அனுமானும் பொருதல்

[ படைத்தலைவர்கள்மட்டும் ஓடாமல் நின்றார்கள். அனுமான் ஒரு பெருமலையைப் பேர்த்தெடுத்துக்கொண்டான். வில்லைக் கைக்கொண்டுவெங்கோபத்தோடுநின்ற விரோதிவீரனை இந்திரசித்துக்கெதிரே, கல்லைக்கைக்கொண்டுநின்ற அனுமானுக்கு, என்ன தீங்கு நேருமோவென்று தேவர்கள் கூறினார்கள். கைக்கொண்டிருந்த கடினமான மலையை அனுமான் வீசியெறிந்ததைக் கண்டு, உலகமெல்லாம் குலைகுலைந்தன. (சூரியன் தன்மீது தோன்றப்பெற்ற) மேரு (இரண்டிருந்தால், அவைகள்) நேராகக் குண்டலங்கள் (மேலே விளங்கி) ஒளிவீசப்பெற்ற தோள்களையுடைய இந்திரசித்து, அண்டங்குலுங்க ஆரவாரித்து, அந்த மலை தூளாகிவிழும்படி அம்பெய்தான். (அவன் அதிவேகமாக அம்பெய்ததனால், இமையாதகண்ணினராதலால் இடைவிடாது பார்க்கும்) இமையோரும் மலைதூளான (காரியத்)தைக் கண்டார்களேயன்றி அம்பெய்த (காரணத்)தைக் கண்டாரில்லை.* வேறொருமலையை எடுத்து வீசுதற்குச் சுழற்றிய அனுமான்மார்பிலும் தோளிலும் காலிலும் கையி

---

* விண்டலத் தெறிந்த குன்றம் வெறுந்துகளாக வீழக்
கண்டனர், எய்த தன்மை கண்டிலர், இமைப்பில் கண்ணோர்.

துகள் - தூள்.

லும் கழுத்திலும் கண்ணிலும் கொடிய விடம் தோய்ந்தனவும் தீயை முனையிற்கொண்டனவுமான பாணங்கள் பாய்ந்தன. உடம்பெங்கும் தைத்த ஒளியுள்ள அம்புகளுடனும் அம்புதைத்தபுண்ணினின்று பொழியும் இரத்தத்துடனும் விளங்கிச்சிவந்த உதயசூரியனை ஒத்த அனுமான் அயர்வுற்றான்.

## மற்ற வானரத்தலைவர்களும் இந்திரசித்தின் அம்புகளால் வலியிழத்தல்

அனுமான் அயர, சுக்கிரீவன் அங்கதன் முதலியோர் எதிர்க்க வந்தவர்களைக் கண்டு சினந்து, இந்திரசித்து, 'சிங்கம் யானையை எதிர்ப்பதல்லாமல் குரங்குகளை எதிர்க்குமோ? என்னோடு சிறிது நேரமாவது போர்புரியவல்ல இலக்குமணனைக் காட்டுங்கள். அனுமன் பட்டபாட்டை அறியீரோ? நீங்கள் (தோற்றொழிந்த) முன்னைய நீங்களல்லீரோ? புதிதாக வலிமை சம்பாதித்துக் கொண்டுவந்தீர்களோ? மனிதரைக் காட்டிவிட்டு, உங்களுடைய மலைகளுக்கு நீங்கள் போங்கள்'* என்றான். அதுகேட்ட வானரர் மலைகளையும் மரங்களையும் எறிந்து நெருங்கினார்கள். அவன் மேருவையும் உருவவல்ல கணக்கற்ற கணைமாரிபொழிய, அவர்கள் வருந்தி வலியோய்ந்தார்கள்.

## இலக்குமணன், அனுமான்தோளேற, இந்திரசித்து தேரேறுதல்

விபீடணன், இலக்குமணனை நோக்கி, 'இந்திரசித்து, காளமேகம்போன்று பொழிகின்ற அம்புமாரியால் உன் பெருஞ்சேனை அழிகின்றது. அவன் வேள்விமுடியாதொழிந்தது. இனி அவன் உயிர்பிழைத்துப்போகாதபடி போர்செய்தற்கு விரைந்துபோவாயாக' என்றான். அப்போது, அனுமான், இலக்குமணனை 'என் தோள்மேல் ஏறுக' என, அவன் அப்படியே செய்தான். அது கண்ட இந்திரசித்து ஆயிரங்குதிரைகள் பூட்டப்பட்ட ஒரு தேர்மீது ஏறினான்.

---

* இ(ன்)னும் மு(ன்)னை நீரல்லீரோ? எவ்வலி ஈட்டி வந்தீர்?
மனிதரைக் காட்டி நுந்தம் மலைதொறும் வழிக்கொள் வீரே.

ஈட்டி - சம்பாதித்து. நுந்தம் - உங்களுடைய.

## இருவரும் பொருதல்

நெருப்பு, இடி, மழு, கழுகு, பேய், பசி, நோய், தீவினை ஆகிய இவைகளைப்போன்ற, (உயிரைவருத்தும்) சில அம்புகளை இலக்குமணன் எய்தான். அவன் எவ்வகையான அம்புகளை யெய்தானோ, அவ்வகையான அம்புகளை எய்து, அவைகளை இந்திரசித்து அறுத்தான். அவன் கணக்கற்ற அம்புகளைக் குருவிக்கூட்டம்போலச் செல்லும்படி விடுத்தான். இலக்குமணன் அந்த அம்புகள் எத்தனையோ அத்தனை அம்புகள் தொடுத்து அவைகள் திரும்பிப் புறப்பட்டதிசைநோக்கிப் போகும்படிசெய்தான்.

இருவீரரும் சாரிதிரிவாராக, தேர்க்கால் சென்றவழியே அனுமான்காலும், அனுமான்கால் சென்றவழியே தேர்க்காலும், திரிவனவாய்ப் பெருமலையும் சிறுகல்லும், உயர்ந்தமரமும் தாழ்ந்த செடியும் என்ற வேறுபாடின்றி எங்கும் ஒருநிகராக (எல்லாம் சமமாக)ச் சென்றன.

போர்வீரர்களே, இவன் இன்னான் இவன் இன்னானென்று தெரியாதபடி இருவீரரும் வெகுவிரைவாகச் சரங்கள் சொரிந்துகொண்டு சாரிதிரிந்தார்கள். இருவரும் இருகடல்கள் ஒன்றையொன்றெதிர்த்தாற்போலப் பொருதார்கள். (விண்ணினின்று போர்காணும்) தேவர்கள், 'எந்த வீரரும் இந்த வீரரை ஒப்பாரில்லை' யென்று தம்முள்ளே சொல்லிக்கொண்டார்கள்.* இருவரும் எய்யும் அம்புகள் விண்ணிற் செல்கின்றனவா, செல்கிலவா என்று தேவர்கள்கண்களாலும் அறியமுடியவில்லை. அந்த அம்புகள் எத்தனையெனக் கணக்கிடுவோமென்றால், அவைகளைக் குறித்தற்கு எண் இல்லை. அந்த அம்புகளுக்கிடையே வாயுபகவானும் நுழையமாட்டான் (ஆகும்படி அவைகள் நெருங்கியிருந்தன). அவைகளைப் பற்றித்தெரிந்ததெல்லாம் அவைகள் உடல்களிற்செய்த புண்களே.

---

* இருவீரரும், இவன் இன்னவன் இவன் இன்னவனென்று
செருவீரரும் அறியாவகை திரிந்தார்; கணை சொரிந்தார்
'ஒருவீரரும் இவர் ஒக்கிலர்' எனவானவர் உரைத்தார்
பொருவீரையும் பொருவீரையும் பொருதாலெனப் பொருதார்.

செரு - போர். கணை - சரம் - அம்பு. பொருதல் - போர்செய்தல். வீரை - சமுத்திரம்.

இலக்குமணனம்புகளால் இராட்சசசேனையும் இந்திரசித்தின் அம்புகளால் வானரசேனையும் நிலைநிற்கமாட்டாதனவாய் எல்லாத்திசைகளிலும் சிதறியோடின. ஒருவர் அம்புகள் மற்றொருவருடைய கவசத்திலும் காலிலும் மார்பிலும் தோளிலும் முகத்திலும் பாய்வனவாயின. இந்திரசித்து, இலக்குமணன் உடம்புள் அழுந்தும்படி இருபத்தைந்து பாணங்கள் எய்தான். இலக்குமணன் அவனுடைய கவசத்தைத் துளைத்து உடலூடுருவி அப்பாற்போம்படி சில கொடிய கனல்கின்ற கணைகளை விடுத்தான். இந்திரசித்து, முன்னாளிலே தேவேந்திரனுடைய ஐராவதயானை நிலைகெட்டோடச் செய்தனவும் தேவர்களை அரிந்து எரிந்தோடினவுமான பாணங்களை அனுமான்தோள்மேல் எய்தான். அனுமான், இரத்தஞ்சோர்தலால் உதயசூரியனையொத்துத் தோன்றுவதை இலக்குமணன் பார்த்துக் கோபங்கொண்டு, இந்திரசித்தின் தேர் தூளாகும்படி அம்புதொடுத்தான். அவன் வேறொரு தேர்மீது தாவியேறிப் பத்துப்பாணங்களை இலக்குமணன் தலையைத் தாக்கும்படி விடுத்தான். அதனால் இலக்குமணன் பதைத்தான்; பின்பு தேறி, சிவன் எமன்மார்பில் உதைத்தாற்போல, இந்திரசித்தின்மார்பில் உதைக்கும்படி ஒரு பாணத்தைப் பிரயோகித்தான். அது கவசத்தைத் துளைத்து மார்பையும் துளைக்க, அவன் அவசமடைந்தான். இலக்குமணன், பின்னும் ஒரு கணைதொடுத்து அவன் கொடியை அறுத்துத் தேரைத் துளைத்தான். அவன்மார்பினின்று நீராக்குப்போல இரத்தமொழுகத் தள்ளாடிச் சலித்துத் தொள்ளாயிரம் அம்புகளை இலக்குமணன்மேல் எய்ய, அவை கவசத்துள்ளே நுழையமாட்டாதனவாய்க் கழியக் கண்டு, கோபம் மீக்கொண்டு பின்னும் ஆயிரம் அம்புகளை இலக்குமணன் மார்பைக்குறித்து எய்தான். இலக்குமணன் அந்த அம்புகளைத் தன் அம்புகளால் முறித்து, அவன் உடம்புமுழுதும் அம்புகள் நெருங்கித் தைக்கும்படியும் அவன் வில் நாண் அறும்படியும் செய்தான். 'இவன் (இலக்குமணன்) வில், மும்மூர்த்திகளின்வில்லோ? இவன் அம்புகள் என் (இந்திரசித்தின்) கவசத்தைச் சிதைத்துத் தாம் சிதையாதனவாயினவே, எனக்கு வெல்லும் வலிமையில்லையே' என்று எண்ணி இந்திரசித்து தளர்ச்சியடைந்தான்.

### இலக்குமணனுக்கு விபீடணன் இந்திரசித்தின் தளர்ச்சியை உணர்த்தல்

விபீடணன், இந்திரசித்து தளர்வுற்றதைத் தெரிந்து, இலக்குமணனை அணுகி, 'தேவர் யாவரையும் செயித்தவனைச் செயித்தாய். அவன் மனந்தளர்ந்தான். இனிச் சாதலினின்று தப்பமாட்டான்' என்றான்.

இந்திரசித்து, 'இதைப்போக்குவாய்' என்று கூறி, (வாயு தேவனை அதிதேவதையாகவுடைய) வாயவியாத்திரத்தை விடுத்தான். இலக்குமணன், அப்படையை அப்படையால் தடுத்தான். அவன், (அக்கினிதேவனை அதிட்டானதேவதையாகவுடைய) ஆக்கினேயாத்திரத்தை விடுத்தான். இவன் அதனை அதனால் தடுத்தான். அவன் வருணாத்திரத்தையும் சூரியாத்திரத்தையும் தொடுக்க, இவன் அவைகளை அவைகளால் தடுத்தான்.

### இந்திரசித்து, பிரமாத்திரம் எய்தல்

'இதன் முன் அழிந்த அத்திரங்கள்போல அழியாததோர் அத்திரத்தைத் தொடுப்பே'னென்று மனத்துள் நினைத்துப் பிரமாத்திரத்தை எய்து, 'இனி இறந்தாய்' என்று இயம்பினான் இந்திரசித்து.

அதைக்கண்ட சிவனும் பிரமனும் இந்திரனும் தேவரும் முனிவரும் மனங்குலைந்து, 'இலக்குமணனுக்குத் தீங்குநேராததாக' என்று பிரார்த்தித்தார்கள். உலகமெல்லாம் உண்ண எரித்தழிக்கும் உகாந்தகாலாக்கினிபோலப் பெருஞ்சுவாலை வீசிக்கொண்டு வருகின்ற அந்தப் பிரமாத்திரத்தை இலக்குமணன் கண்டான்.

### இலக்குமணன் பிரமாத்திரமெய்தல்

கண்டவன், '"வலிமையற்றவன் இவன் (இலக்குமணன்). நான் (இந்திரசித்து) முன் இதை (பிரமாத்திரத்தை)த் தொடுத்தபோது, தடுத்தானில்லை. இதை இப்போது விடுத்தால், இறந்தேபோவான்" என்றெண்ணி, இந்த அம்பை எய்திருக்கிறான். இப்போது நம் (இலக்குமணனுடைய) திறமையை வெளிக்காட்டாமல் ஒளித்தால், அது செய்யத்தக்க கருமமாகா'தென்றெண்ணிப் பிரமாத்திரத்தைக் தொடுக்கத்துணிந்தான். துணிந்தவன், 'உலகுக்கு நன்மை உண்டாகுக; இந்திரசித்தின் உயிர்மேற் செல்லாதொழிக;

அவன்விட்ட படையை மாய்த்திடுக' என்று கூறித் தன் பிரமாத்திரத்தை விடுத்தான். 'உலகுக்கு ஊறுசெய்யாமல் எதிரி விடுத்த படையை மாய்த்திடுக' என்று கூறினமையோடமையாமல், 'இந்திரசித்தின் உயிர்மேற் செல்லற்க' என்ற கருணையைத் தேவர்கள் பாராட்டினார்கள். இந்திரசித்தின் பிரமாத்திரத்தை இலக்குமணன் பிரமாத்திரம் மாய்த்துவிட்டது. அதுகண்ட தேவர், 'இராமலக்குமணர் செய்துமுடித்தற்கரியதில்லை; பகைமுழுவதையும்போக்கினவராளும்' என்று மகிழ்ந்தார்கள்.

இந்திரசித்து, நாராயணாத்திரத்தை எடுத்து, இலக்குமணனை நோக்கி, 'நீ இதைத்தடுப்பாயானால், யாரும் உன்னை எதிர்த்துநிற்க மாட்டார். (ஆனால் இதைத்தடுக்கும்வலி உனக்கில்லை.) நீ இறந்து விண்ணடைவாய். இது தவறாது' என்று கூறி, அந்த அத்திரத்தை எய்தான். அது செல்லும்வழியிலுள்ளாரெல்லாரையும் நீத்துவிடுவதாயிருப்பதைத்தெரிந்து, தேவர்முதலியோர் சிரமேற் கரங்கூப்பித் தங்களைப் பாதுகாத்துக்கொண்டார்கள். அது கைகூப்பியவர்களுக்கு(த் தீங்கிழையாமல்) படிந்துபோவதையும் உலகேழையும் நீக்கின்றதென்னும்படி செல்கின்றதையும் தடுக்கமுடியாத திருமாலின் படையென்பதையும் இலக்குமணன்தெரிந்து, தன்னைத் திருமாலாகத் தியானித்து அதனெதிரே நடந்தான். அது, அவனை அழிக்காததாகி விலகிச்சென்று அவனைப் பிரதட்சிணஞ்செய்து நெருப்புச்சுடரொழிந்து புகையும் அற்றுப்போயிற்று. ]

162 எத்தாடின ரிமையோர்களுங்[1] கவியின்குல மெல்லாம்
கூத்தாடின ரரமங்கையர் குனித்தாடினர் தவத்தோர்
காத்தாயுல கனைத்தும்மெனக் களித்தாடினர் கமலம்
பூத்தானுமம் மழுவாளியு முழுவாய்கொடு புகழ்ந்தார்.[2]

கொண்டுகூட்டு: இமையோர்கள் எத்தி ஆடினர்; கவியின்குலமெல்லாம் கூத்தாடினர்; அரமங்கையர் குனித்தாடினர்; தவத்தோர், '(இலக்குமண,) உலகனைத்தும் காத்தாய்' எனக் களித்து ஆடினர்; கமலம்பூத்தானும் அம் மழுவாளியும் முழுவாய்கொடு புகழ்ந்தார்.

பொருள்: (நாராயணாத்திரம் தீங்கொன்றுஞ்செய்யாது நீங்கினதைக் கண்ட) தேவர்கள், (இலக்குமணனைத்) துதித்துக்கொண்டு, ஆடினார்கள். வானரகுலத்தாரெல்லாரும் கூத்தாடினர். தேவமாதர் குதித்தாடினர். முனிவர்கள், '(இலக்குமண,) உலகனைத்தையும்

காப்பாற்றினுய்.' என்றுகூறி மகிழ்ந்து ஆடினுர்கள். (திருமால் உந்திக்) கமலத்திலே தோன்றினவனுன பிரமதேவனும் சிவபிரானும் (இலக்குமணனே) வாயாரப்புகழ்ந்தார்கள்.

'எத்தாடினர்', 'எத்தி (- துதித்து) ஆடினர்,' என்பதன் விகாரம். கவி - குரங்கு. 'கூத்தாடினர்' என்ற பயனிலைக்கேற்ப, 'குலம்' ஆகுபெயராய்க் குலத்தாரைக் குறித்ததாகக்கொள்க. கமலம் - தாமரை. பூத்தல் - தோன்றுதல். மழுவாளி - சிவன்.

பாடபேதம்: [1]இமையோர்புலம். [2]பூத்தானுடன்........புகழ்ந்தான்.

இந்திரசித்து பாசுபதாத்திரம்விடுதல்

[ நாராயணுத்திரம் இலக்குமணனைத் தீங்குசெய்யாததைக் கண்ட இந்திரசித்து, 'இவன் (இலக்குமணன்) யாரோ' என்று சந்தேகித்து, 'இவன் அந்த நாராயணுத்திரத்தின் தலைவனுன திருமாலே' யென்று வியந்து, 'இவன் எவனுயினும் நன்றே. (பிரமதேவன் நெடுங்காலஞ் சிரமப்பட்டுப் படைத்த உலகங்களெல்லாவற்றையும் ஒருநாளிலே ஒருபகலிலே ஒழிப்பவனுன) பரமசிவனுடைய படையை விடுத்து இவனுயிரைமுடிப்பேன்' என்று எண்ணினுன். அவன்கருத்தை அறிந்து, இப்பொழுது இலக்குமணனை மாய்த்துவிடுவானென்று விண்ணேரெல்லாரும் வெருவுற்ருர். மண்ணேரனைவரும் மறுகுற்ருர். அவன் 'நான் நெடுங்காலம் வருந்தித் தவஞ்செய்ததனுல், சிவபிரான் பிரத்தியட்சமாகவந்து பிரசாதித்தது, இந்தப் படை. இது, இவன் உயிரைக் கொள்ளுதற்குச் சந்தேகமில்லை'யென்று எண்ணி, அதற்கு மானதபூசையாகப் பூவும் நீரும் சந்தனமும் தூபதீபமும் கொடுத்துத் தியானஞ்செய்து, எதனுலும் இடையூறெய்தாத அந்தப்படையைநோக்கி, 'இந்த இலக்குமணனுடைய உயிரைப் பறித்துக்கொண்டு இங்கே திரும்பிவருவாயாக' என்று சொல்லி அந்தப் பாசுபதாத்திரத்தை எய்தான்.

பாசுபதாத்திர சொரூபமும் செயலும்

அந்த அத்திரம் ஒருதானே, சூலங்களும் மழுக்களும் சுடுகணைகளும் விடங்களும் இடிக்கூட்டமும் எமனுருவங்களும் கரும்பூதங்களும் பெரும்பேய்களுமாகி உலகெங்கும் பரவியது. அப்போது, தேவர்கள், சிதறியோடினுர்கள். முனிவர்கள், 'இது பழுதுபடாது; இலக்குமணன் இறப்பான்' என்று பயந்து வருந்தினுர்கள். குரங்குகள் பட்டபாடு கூறுந்தரமன்று.

### இந்திரசித்து விட்ட பாசுபதாத்திரத்தை இலக்குமணன்விட்ட பாசுபதாத்திரம் விழுங்கிவிடுதல்

விபீடணன், அந்த அத்திரத்தின்செயலைக்கண்டு அஞ்சிப் பெருமூச்செறிந்து வேர்த்து, விதிர்விதிர்த்து, இலக்குமணனை நோக்கி, 'இதனை விலக்கக்கூடுமோ' என, அவன் சிரித்தான். வானரர்கள், அந்த அத்திரத்துக்கு அஞ்சி அவனை அடைக்கலமடைந்தார்கள். அவன் அனைவருக்கும் அபயமளித்துத் தன் பாசுபதாத்திரத்தை மனத்தால் அர்ச்சித்து 'அதனை அழிப்பாயாக. வேறு தீங்கு யாதும் செய்யாயாக' என்றுகூறி எய்ய, அது, விரோதி ஏவிய அம்பை விழுங்கிவிட்டது.

### அத்திரபலத்தாலன்றி என் வில்வித்தைப்பலத்தால் வெல்வேனென்று இந்திரசித்து அம்பெய்தல்

இந்திரசித்து, தெய்வப்படைகள், சிதைவுற்றனவென்று சிந்தைகலங்காமல், 'வில்வித்தைத்திறமையால் வெல்வே'னென்றெண்ணி, இலக்குமணன் தோளிலும் நெற்றியிலும் அழுந்தும்படி கைத்திறமைகாட்டிச் சில கணைகளை எய்தான். சுக்கிரீவன்முதலிய வானரத்தலைவர்கள்மேல், அவர்கள் பிழைக்கமாட்டார்களென்று எண்ணும்படி, அளவற்ற அம்புகளைத் தொடுத்தான். இலக்குமணனுக்குப் பக்கத்தில்நின்ற தன் சிறியதந்தையான விபீடணனை நோக்கி வெகுண்டு விளம்புவானாயினன். ]

### இந்திரசித்து விபீடணனை இகழ்தல்

163 முரட்டடந் தண்டு மேந்தி மனிதரை[1] முறைமை குன்றப்[2]
பிரட்டரிற் புகழ்ந்து பேதை யடியரிற் றொழுது[3] பின்சென்
றிரட்டுறு முரச மென்ன[4] விசைத்ததே யிசைக்கின் றனையப்
புரட்டுவன் றலையை யின்று[5] பழியொடு[6] மொழிவன் போலாம்.

கொண்டுகூட்டு: 'முரண் தடம் தண்டும் ஏந்தி, முறைமை குன்ற மனிதரைப் பிரட்டரிற் புகழ்ந்து, பேதை அடியரில் தொழுது, பின்சென்று, இரட்டுறும் முரசம் என்ன இசைத்ததே இசைக்கின்றனையை இன்று தலையைப் புரட்டுவன். பழியொடும் ஒழிவன்போலாம்.'

பொருள்: '(நீ வீரன்போலத்) தண்டாயுதத்தைத் தாங்கி (வீரருக்குரிய) முறைமை குறையும்படியாக (உயர்ந்த இராட்சச சாதியிற் பிறந்திருந்தும் அந்தச் சாதிமுறை தவறிச் சாதி)ப்

பிரட்டர்போல(த் தாழ்ந்த சாதியாரான) மனிதரைப் புகழ்ந்து மடமையுடைய அடிமைகள்போல, (அவர்களைத்) தொழுது பின் சென்று, கொட்டுகின்ற முரசு (தானாக) ஒலியாமல், கொட்டுவார் கொட்ட ஒலித்தல்) போல(த் தானாகச் சுவாதீனனாய் ஒன்றும் சொல்லாமல் பராதீனனாய் அம்மனிதர் இருவர்) சொன்னதையே சொல்லும் உன்னை இன்று தலையைத் (தரையிலே) உருளச்செய்வேன். (அப்படிச் செய்துவிட்டே, சிறிய தந்தையைக் கொன்றானென்ற) பழியுடன் (இப்போர்க்களத்தைவிட்டு) நீங்குவேன்.'

முரண் தடம் தண்டு - வலிய பெரிய தண்டாயுதம். தண்டும் என்பதில் உம்மை இசைநிறை. பிரட்டரில் - நெறிபிறழ்ந்தவர்போல. பேதை பேதைமைக்கு ஆகுபெயர். பேதை அடியரின் - பேதைமை (அறிவில்லாமை) யுடைய அடிமைகள்போல. இரட்டுதல் - கொட்டுதல் (தமிழகராதி). இசைத்தல் - சொல்லல். புரட்டுதல் - உருட்டுதல். போல் ஆம் இசைநிறையசைகள்; கட்டுரைச்சுவைபயக்கும் அசைச்சொற்களுமாம்.

'ஒலித்தவண்ணமே மீண்டும் ஒலிப்பதால், சொல்லியதே சொல்லுவதற்கு, முரசு, உவமையாயிற்று' வை. மு. கோ.

பாடபேதம்: [1] நீசரின். [2] முறைமைகூறிப், முறையைக் குன்றிப். [3] இரந்து. [4] என்னை. [5] அந்தோ, ஒன்றோ. [6] பழியென.

[ 'பார்த்தமாத்திரத்திலேயே பயந்து ஒதுங்கித் தலைமையானரெல்லாரும் கீழ்விழுந்து வழிபடும்படி மூவுலகாட்சியும் வருமானாலும், அந்த வாழ்வு பழிவிளையுமாறு வருவதாயிருந்தால், அதற்கு ஆயுதந்தாங்கிய ஆண்மையுடையவர் ஆரும் ஆசைப்படார் (அப்படிப்பட்ட வாழ்வை நீ விரும்புகின்றாய்). நீர்வற்றியொழிந்தபோது மீன்களெல்லாம் செத்தொழிந்தனவாம். அதுபோல, இராவணன் ஒழியும்போது, இராக்கதரெல்லாம் இறந்தொழிந்தவராவர். அப்போது, இலங்கையூர் இருக்கும். (இராக்கதரெல்லாரையும் நீங்கித் தனித்த ஒருத்தனாகநிற்பவனான) நீ இருப்பாய். நீ அரசுவீற்றிருக்கையில் உன்னுடன் வாழ்தற்கு அரக்கர் ஆர் உயிரோடிருப்பார்?'.*

* ஊருள தொருவன் நின்றாய் நீயுளை உறைய நின்றோ
டாருளர் அரக்கர் நிற்பார்? அரசுவீற் றிருக்க ஐயா.

உளை - இருக்கின்றாய். உறைய - வாழ. நிற்பார் - உயிரோடிருப்பார்.

'(நீ பெரும்பலமென்று தவறுகக்கருதுகின்ற மனிதபலத்தைத் துணையாகக்கொண்டு, இலங்கையில் அரசுசெய்வதற்கு எண்ணிக் கொண்டிருக்கின்றாய்! இது பேதைமை). உலகங்களையெல்லாம் படைத்(ததனுல் மண்பொதுத்தந்தையெனப் பெயர்படைத்)த பிரமதேவருடைய தந்தையாரான திருமாலைப் போரிலே சாயச் செய்தவரும் கந்தனுர்தந்தையாரான சிவபெருமானைக் கயிலைமலை யோடு ஒருகையிலே தூக்கியவரும் என்தந்தையாருமான இராவண னுர் அரசாட்சிசெய்வது (நீ, சரணடைந்து சார்ந்திருக்கிற மனிதர்க ளுடைய) அற்பபலத்தை(த் துணையாக)க்கொண்டோ?* பிரம தேவனை மூலபுருடனுகக்கொண்ட பிராமணகுலத்துக்கெல்லாம் தனிமுதற் றலைவனுன உன்னை(த் தெரிசித்தற்கு) வந்து தேவர்கள் வணங்குவார்கள். (அப்படிப்பட்ட பெருமையுடைய பதவியி லிருந்த) நீ, மனிதருக்கு அடிமையாகி, (அவர்கள் உதவியால்) இராவணன்செல்வத்தை ஆள(க்கருதி) இருக்கின்றாய். (அற்ப மனிதருக்கு அடிமையான) உனக்கு மானம் ஏது? அது, (எங்க ளிடத்துமட்டும் தங்கியிருந்து நாங்கள் இறந்து மறைந்தபோது) எங்களோடு மறைந்துவிட்டதேயாம்.'

'உன்தங்கை (சூர்ப்பனகை) மூக்கையரிந்தவனை மானமின்றிச் சரணடைந்து அவனைத்துணையாக)க்கொண்டு உன் தமயனை எங்க ளோடுங்கொன்று (எங்களைக்கொன்றதனுல், எங்களுக்குத்)தோற்ற எமனை (எங்களுயிரைப் பிரித்துக்கொண்டுபோகும்படி) வெற்றி யடையச்செய்துவாழும்வாழ்வினும் வறுமைவாழ்வுபெருமையாம்.']

164 எழுதியே ரணிந்த திண்டோ ளிராவண னிராம னம்பாற்
புழுதியே பாய லாகப் புரண்டநாள் புரண்டு மேல்வீழ்ந்
தழுதியோ நீயுங் கூட வார்த்தியோ விவனை[1] வாழ்த்தித்
தொழுதியோ வென்னே[2] செய்யத் துணிந்தனை[3] விசயத் தோளாய்.

---

* கந்தனுர் தந்தையாரைக் கயிலையோ டொருகைக் கொண்ட
எந்தையார் அரசுசெய்வ திப்பெரும் பலங்கொண் டேயோ?

எந்தை - என்தந்தை. இவ்வடிக்கு, 'எந்தையாகிய இராவணனுர் (ஆண்ட) அரசினை (நீ ஆட்சி) செய்வது நீ சரணடைந்து சார்ந்திருக்கிற மனிதர்களுடைய அற்பபலத்தைத் துணையாகக்கொண்டோ' எனவும் பொருள் உரைக்கலாம். 'இந்த(ச்சிறுமனிதருடைய) அற்பபலத்தைக்கொண்டோ' என்ற கருத்துப்படப் பரிகாசமாக 'இப்பெரும் பலங்கொண்டேயோ' என்முன்.

கொண்டுகூட்டு: 'விசயத்தோளாய்! எழுதி ஏர் அணிந்த திண்தோள் இராவணன், இராமனம்பால் புழுதியே பாயலாகப் புரண்டநாள், மேல் வீழ்ந்து புரண்டு அழுதியோ, நீயும் கூட ஆர்த்தியோ, இவனை (இராமனை) வாழ்த்தித் தொழுதியோ, என்னை செய்யத் துணிந்தனை?'

பொருள். 'இராவணன், இராமனம்பால் (மாண்டு) புழுதியே படுக்கையாகப் புரளும்நாளில், (தமையன் இறந்தானென்று அவன்) மேல்விழுந்து (துக்கந்தாங்கமாட்டாமல் மண்ணில்) புரண்டழுவாயோ? (அவனைக்கொன்ற பகைவன்பக்கத்தார்) கூட நீயும் வெற்றி முழக்கஞ்செய்வாயோ? இவனை வாழ்த்தித் தொழுவாயோ? எது செய்யத் துணிந்திருக்கின்றாய்?'

எழுதுதல் - சித்திரம்வரைதல். 'எழுதுங்காற் கோல்காணுக் கண்ணே போல்' (தமிழகராதி). எழுதி ஏர் அணிந்த திண்டோள் - (மன்மதன் உருவம் முதலிய) சித்திரம் எழுதப்பெற்று அழகுடையனவான தோள்கள். பாயல் - படுக்கை. அழுதி - அழுவாய். ஆர்த்தியோ - ஆரவாரிப்பாயோ. விசயம் - வெற்றி. 'விசயத்தோளாய்' என்றது, இகழ்ச்சிகுறித்தது.

பாடபேதம்: [1] அவனை. [2] யாதோ. [3] துணிந்தது.

165 ஊனுடை யுடம்பி[1] னீங்கி[2] மருந்தினு[3] லுயிர்வந் துய்யும்[4]
மானிட ரிலங்கை வேந்தைக் கொல்வரே[5] நீயு மன்னன்
தானுடைச் செல்வந் துய்க்கத் தகுதியே[6] சரத்தி னோடும்
வானிடைப் புகுதி[7] யன்றே யான்பழி மறுக்கி லென்றான்.

கொண்டுகூட்டு: 'உயிர் ஊன் உடை(ய) உடம்பின் நீங்கி மருந்தினால் (திரும்பி) வந்து உய்யும் மானிடர் இலங்கைவேந்தைக் கொல்வரே! நீயும் அன்னன்தான் உடை(ய) செல்வம் துய்க்கத் தகுதியே! யான் பழி மறுக்கில், சரத்தினோடும் வானிடைப்புகுதியன்றே?'

பொருள்: '(துராசைகாரணமாக, நீ பகற்கனவு காண்பவனாகிப் பாவனாலோகத்திலே, "இராவணன் மாள்வன், நான் ஆள்வென்" என்று மனப்பால்குடிப்பதைக் குறித்து, "இராவணன் இராமன் அம்பால் புழுதியே பாயலாகப்புரண்டநாள்" என்றும், "இராவணன் செல்வம் ஆள்வாய்" என்றும் இப்போது கூறினேன். இனி, உண்மையுலகத்தில் திண்ணமாக நிகழ்பவைகளைக் கூறுகின்றேன் கேள். என்னுடைய அம்பினால்) உயிர் உடம்பினின்று நீங்கி மருந்தினால் (திரும்ப) வரப்பெற்று வாழும் மனிதர், இலங்கையரசனைக்

கொல்லமாட்டுவரோ? (மாட்டார்). நீ அவன் செல்வத்தை அனுபவிக்கத் தகுதியுடையையோ! (அல்லை). நான் (சிறியதந்தையைக் கொல்லுதல்) பழியென்பதை நிராகரிப்பேனானால், என் அம்பினால் (கொல்லப்பட்டு) வானுலகையடைவாயல்லையோ?' (சொல்லு).

உடை - உடைய. எய்தும் - அடையும். துய்த்தல் - அனுபவித்தல். தகுதி - தகுவாய். சரத்தினோடு - சரத்தினால் - அம்பினால். ஓடு என்னும் உருபு ஆல் என்னும் உருபுப்பொருளில் வந்தது. புகுதி - புகுவாய். மறுக்குதல் - ஆட்சேபித்தல் - நிராகரித்தல். பழிமறுக்கில் - (சிறிய தந்தையைக் கொல்வது) பழி (என்பதை) நிராகரித்தால். 'கொல்வரே', 'தகுதியே' என்பவைகளில், ஏகாரம் எதிர்மறை.

பாடபேதம்: [1] உடம்பு. [2] நீக்கி. [3] மருந்தினின். [4] வந்தெய்தும்; பெற்றுய்யும். [5] கொல்வதே. [6] துய்ப்பதுறுதியே. [7] படுதி.

## விபீடணன் விடை

[ இந்திரசித்து இவ்வாறு கூறியதைக் கேட்ட விபீடணன், தலையையசைத்துக் குறுஞ்சிரிப்புக்கொண்டு, 'தீயது பாவம்; சிறந்தது தருமம். தருமம் துணையாக வாழ்வேனேயன்றி, இம்மையில் அழியாத பழிக்கும் மறுமையிற் கடத்தற்கரிதான நரகத்துக்கும் காரணமான பாவம் துணையாக வாழமாட்டேன். பொய்ம்மையுடைய உங்களைத் துறந்தேனேயன்றி மெய்ம்மையைத் துறந்தேனல்லேன். இலங்கைவேந்தன் பிழைபடநடந்தபோதே, அவன் தம்பியல்லேனாயினேன்.* பொய் உரைத்திலேன். கள் உண்டிலேன். வலாற்காரத்தால் எதையும் கொண்டிலேன். மாயமான வஞ்சகத்தைச் (செய்தல்கிடக்க, சிந்திக்கவும்) செய்திலேன். என்பால் யாரும் எக்குற்றமுங் கண்டதில்லை. பெண்கள் திறத்தில் முறைதவறி நடந்தவனைப் பிரிந்தது பிழையாமோ? உன் தந்தை, கற்பிற்சிறந்த சீதாதேவி வருந்தும்படிசெய்தல் தீயதென்று நான்கூறக் கோபித்துப் 'போய்விடு' என்றபோது, அவனைவிட்டுப் போனேன். "அறத்தினைப் பாவம்வெல்லாது" என்பதறிந்து, உன் தந்தையைத் துறந்து,

---

* துறந்திலேன் மெய்ம்மை பொய்ம்மை உம்மையே துறப்ப தல்லால்
பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின்னவன் பிழைத்த போதே.

இலங்கைவேந்தன் பிழைத்தபோதே அவன்பின் பிறந்திலேன் என இயையும்.

இராமனையடைந்தேன். அதனால், புகழ்வருவதாயினும் வருக; பழிவருவதாயினும் வருக. இல்லாதமேன்மை எய்தினும் எய்துக; உள்ள மேன்மை ஒழியினும் ஒழிக. (எதனையும் ஏற்றுக்கொள்வேன்)' என்றான்.

## இந்திரசித்து, விபீடணன்மேல் அம்பும் வேலும் விட, இலக்குமணன் அழித்தல்

'நீ அடைவதாகக்கூறும் பெருமையெல்லாம், என் அம்பினால் அழியும் பெருமையாய்விடும்' என்றுகூறி, இந்திரசித்து, விபீடணன்கழுத்தைக்குறித்து, ஒரு கணையை விடுத்தான். 'இந்தக் கணையினால் இக்கணமே விபீடணன் செத்திடுவான்' என்ற இமையோர்கள் காண, அக்கணையைத் தன் கைக்கணையால் கண்ட துண்டமாக்கினான், இலக்குமணன். அதுகண்டு, இந்திரசித்து, விபீடணன் மேல் வேலை விட, அதனையும் இலக்குமணன் அழித்தான்.

## விபீடணன் இந்திரசித்தின் தேர்ப்பாகனையும் குதிரைகளையும் கோல்லல்

இந்திரசித்து, வேலையேவினானென்ற கோபத்தினால், விபீடணன் விரைந்துசென்று, தண்டாயுதத்தினால் இந்திரசித்தின் தேர்ச்சாரதியையும் குதிரைகளையும் அடித்துக் கொன்றான்.

## இந்திரசித்து, இலக்குமணன்முதலானோர்மீது அம்புபொழிந்து, வானத்தில் மறைந்து, இராவணனிடம் ஏகுதல்.

இந்திரசித்து, அழிந்ததேர்மீதுநின்று, விபீடணன்தோள்களிலும் இலக்குமணன்புயங்களிலும் ஏனையோர்மார்புகளிலும் ஆயிரகோடி அம்புகளைப் பொழிந்து, இரத்தவெள்ளம் ஓடக்கண்டு ஆரவாரஞ்செய்தான். செய்தவன், இனிப் போர்புரிதல், அழியாத தேரில்லாதுமுடியாதென்றுகருதி, அவனைக் கண்டுகொண்டிருந்தவர் கண்ணிமைக்குமுன், மிகுவிரைவாக விண்ணிற்பாய்ந்து, இராவணனிடம்போய்ச்சேர்ந்தான். ]

நிதம்பலையாகப்படலம் முற்றிற்று.

[தொடரும்]

---

௨

# சங்கீத மகரந்தம்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

'கதிர்திகிரி யான்மறைத்த கடல்வண்ண னிடத்துளாள்
மதிபுரையு நறுமேனித் தன்முன்னோன் வலத்துளாள்
பொதியவிழ் மலர்க்கூந்தற் பின்னைசீர் புறங்காப்பார்
முதுமறைதேர் நாரதனார் முந்தைமுறை நரம்புளர்வார்'

'மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்
பயிலிதழ் மலர்மேனித் தன்முன்னோ னிடத்துளாள்
கயிலெருத்தங் கோட்டியநம் பின்னைசீர் புறங்காப்பார்
குயிலுவருள் நாரதனார் கொளைபுணர்சீர் நரம்புளர்வார்'

(சிலப்பதிகாரம்–ஆய்ச்சியர்குரவை)

'முதியவேதத்தின் சிக்கையென்னும் அங்கத்தை ஆராயும் நாரதனார்' என அடியார்க்குநல்லாருரை கூறுதலின், நாரதீசிக்ஷா என்னும் வடமொழியிசைநூல் இளங்கோவடிகள்காலத்திலே வழக்கிலிருந்ததென அறிகின்றோம். 'நாரதன்வீணை நயந்தெரிபாடலும்' எனக் கடலாடுகாதையினுள்ளே குறிப்பிட்டதும் இவ்வுண்மையினை வலியுறுத்துகின்றது.

ராகநிரூபணம், ஸாரஸம்ஹிதா எனப் பெயரிய இசைநூல்களையும் நாரதீசிக்ஷாநூலாசிரியர்தாமே இயற்றினார் என வடமொழி வல்லார் கூறுவர். அடியார்க்குநல்லார் உரைப்பாயிரத்தினுள்ளே 'தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலாவுள்ள தொன்னூல்கள் இறந்தன' என்னுமிடத்துக் கூறிய பஞ்சபாரதீயம் மேற்கூறிய மூன்றனுள் ஒன்றோ, வேறோ? என அறிந்துகொள்ளமுடியவில்லை. அநாகுலன் என்னுந் தெய்வப்பாண்டியன்புதல்வன் ஸாரகுமாரன் இசையறிதற்குச் சிகண்டியார் இசைநுணுக்கம் என்னும் நூலினை இயற்றித்தந்ததுபோல, அக்குமரன்பொருட்டாக நாரத முனிவர் ஸாரஸம்ஹிதா என்னும் நூலினை இயற்றியளித்தனரோ என்பதும் ஆராய்தற்குரியது.

'நாடகத்தமிழ்நூலாகிய பரதம், அகத்தியம் முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன' என அடியார்க்குநல்லார் கூறுதலின், வடமொழிப் பரதநூலின் வேறாகிய தமிழ்ப்பரதம் ஒன்று இருந்து இறந்தது எனவும் எண்ணவேண்டியிருக்கிறது.

நாரதீசிக்ஷா என்னும் பெயரினை 'நாரதசிக்ஷை' எனவும் 'சிக்ஷை நூல்' எனவும் இவ்வுரையினுள் வழங்குவாம். சிக்ஷைநூல் கருவியாகப் பழந்தமிழிசையாராய்ச்சியிலே சில ஐயப்பாடுகளை நீக்கிக் கொள்ளலாமென எண்ணி, அந்நூற்பிரதியினைத் தேடிச்சென்றவிடத்து நாரதப்பெயரினராகிய மற்றொருவர் இயற்றிய சங்கீத மகரந்தம் என்னும் நூற்பிரதிகிடைத்தது. இது, பரோடாமஹாராஜாவின் ஆதரவிலே அச்சேறி வெளியாகும் 'கேய்க்வாட் கீழைத்தேசநூல் வெளியீட்டு' வரிசையிலே 16-ஆம் இலக்கமாக வெளியிடப்பட்டது. பதிப்பாசிரியராகிய மங்கேஷ் ராமகிருஷ்ண தேலாங் என்பவர் இந்நூலின் காலத்தையாராயுமுகத்தால், இது சங்கீதரத்நாகர நூலாசிரியராகிய சாரங்கதேவர்காலத்திற்கு முந்தியதெனவும், பரதமுனிவரது நாட்டியசாஸ்திரத்துக்கு உரைவகுத்தோருள் ஒருவராகிய மாத்ரிகுப்தர்காலத்திற்குப் பிந்தியதெனவும் காட்டுகின்றார். மாத்ரிகுப்தர் மாளவதேசத்துச் சீலாதித்ய பிரதாபசீலன் (கி. பி. 550—600) காலத்தினர். சாரங்கதேவர்காலம் கி. பி. 1210-1247 ஆகும். அங்ஙனமாதலின் இந்நூல் கி. பி. ஏழாம்நூற்றாண்டு பதினோராம்நூற்றாண்டுகளின் இடையெல்லையிலே தோன்றியிருக்க வேண்டுமென்பது பதிப்பாசிரியரது முடிபு.

சிக்ஷைநூலாசிரியர் மகரந்தநூலாசிரியரின் வேறாவார் என்பதற்குப் பதிப்பாசிரியர் காட்டும் காரணங்கள்: சிக்ஷைநூல் வைதிகச் சொன்னடையினது; சாமகானமரபினைப் பெரிதும் கூறுவது; ஆதலினாலே பழமையானது. சிக்ஷைநூலாசிரியர் இயற்றியவாகக் குறிப்பிட்ட ராகநிரூபண, ஸாரஸம்ஹிதா நூற்பிரதிகள் கிடைத்திலவெனவும் பதிப்பாசிரியர் கூறுகின்றார்.

ஹிந்துஸ்தானத்தின் இசை (The Music of Hindostan by A. H. Fox Strangways, Oxford Press) என்னும் ஆங்கிலநூலினுள்ளே நாரதசிக்ஷையென்னும் நூலினைக்குறித்துச் சொல்லப்பட்

டிருப்பவற்றைப் பின்னர்ச் சுருக்கமாகத்தருவாம். சங்கீதமகரந்தத்தினுள்ளுறைபொருளைக்குறித்து முதலிலே ஒருசில கூறுவாம்.

இந்நூற்பதிப்பு ஒரேயொரு கையெழுத்துப்பிரதியினை ஆதாரமாகக்கொண்டதாதலின், மூலபாடத்திலே தெளியாத இடங்களும் பலவுள எனப் பதிப்பாசிரியர் கூறுகின்றார். கையெழுத்துப்பிரதி வித்யாபுரம் எனப் பெயரிய விஜயநகரத்தில் வசித்த கிருஷ்ணஜிதத்தர் என்பவரால் சகவருடம் 1599 (கி. பி. 1677)-ல், அஃதாவது இற்றைக்கு இருநூற்றறுபத்துநான்கு வருடங்களுக்குமுன்பு எழுதப்பட்டது.

சங்கீத அத்தியாயம், முதல் இரண்டாம் மூன்றும் நான்காம் பாதங்கள், நிருத்த அத்தியாயம், முதல் இரண்டாம் மூன்றும் நான்காம் பாதங்கள் என எண்பிரிவினதாக இந்நூல் நடக்கின்றது.

ஆசிரியர் வீணைக்கருவி பதினெட்டு உள எனக்கூறி, அவற்றின் பெயர்களைத் தருகின்றார். 'கச்சபி, குப்ஜிகா, சித்ரா, வஹந்தீ, பரிவாதிநீ, ஜயா, கோஷாவதீ, ஜ்யேஷ்டா, நகுலீ, மஹதீ, வைஷ்ணவீ, ப்ராஹ்மீ, ரௌத்ரீ, கூர்மீ, ராவணீ, ஸாரஸ்வதீ, கிந்நரீ, ஸைரந்த்ரீ, கோஷகா' என்னும் இவற்றுள் பரிவாதிநீ என்பதைப் பொதுப்பெயரென நீக்க, எஞ்சிநின்றன பதினெட்டு. கோஷாவதீ என்பது உதயணனது வீணையாகிய கோடபதியினை நினைவுறுத்துகின்றது. கோஷகா என்பது நால்வகையாழ்களுள் ஒன்றாகிய சகோடயாழ்ப்பெயரினை ஒருபுடை ஒத்துநிற்கின்றது.

இருபத்திரண்டுசுருதிகளுக்கும் இந்நூலிலே தரப்பட்டிருக்கும் பெயர்கள் பரதம், சங்கீதரத்நாகரம் முதலிய நூல்கள் கூறும் பெயர்களினின்றும் வேறுபட்டன.

பழந்தமிழ்மரபிலே இளிக்கிரமம், குரற்கிரமம், தாரக்கிரமம் என வழங்கப்பட்ட ஷட்ஜக்கிராமம், மத்திமக்கிராமம், காந்தாரக்கிராமம் என்பவற்றின் இலக்கணங்களை இந்நூல் விரித்துக்கூறுகிறது.

தாரக்கிரமமெனநின்ற காந்தாரக்கிராமம் இருமொழிமரபிலும் மிகப்பழையகாலத்திலே வழக்கு வீழ்ந்தது. ஆயினும், அதன் இலக்கணம் இந்நூலுட் கூறப்பட்டது. இந்நூற்சூத்திரத்தினையே

சங்கீதரத்நாகரம் எடுத்தாளுகின்றது. தமிழ்மரபிலே தாரக்கிரமம் அலகுக்கணக்கில் வடமொழிக் காந்தாரக்கிரமத்தின் வேறுபட்டதென்பது கணிதவாயிலாக அறியக்கிடக்கின்றது.

மத்திமக்கிராமஸ்வரங்கள் மகரிஸநிதப என ஆளப்படுவன என இந்நூல் கூறும் முடிபு நாரதசிக்ஷை கூறும் முடிபினோடு ஒத்து நிற்கிறது. ஹிந்துஸ்தானத்தின் இசை என்னும் ஆங்கிலநூலிலே ஏழிசைகளின் பெயர், முறை, ஓசையென்றிவற்றைக் கூறும் நாரதசிக்ஷச்சூத்திரப்பொருளினைத் தொகுத்தெழுதியதனை மொழிபெயர்த்துத் தருவாம்.

| | | | |
|---|---|---|---|
| க்ருஷ்டம் | ம | கொக்கு | ஸ்வரிதம் |
| ப்ரதமம் | க | ஆடு | உதாத்தம் |
| த்விதீயம் | ரி | பசு | அநுதாத்தம் |
| த்ருதீயம் | ஸ | மயில் | ஸ்வரிதம் |
| சதுர்த்தம் | நி | யானை | உதாத்தம் |
| மந்த்ரம் | த | குதிரை | அநுதாத்தம் |
| அதிஸ்வாரம் | ப | குயில் | ஸ்வரிதம் |

பழந்தமிழ்மரபில் வழங்கிய ஏழிசையின் பெயர், மாத்திரை (அலகு, சுருதி), ஓசையென்னுமிவற்றைக் கூறும் சூடாமணி நிகண்டுச்செய்யுட்பாகங்களைத் தருவாம்.

'களைபறு குரலே துத்தங் கைக்கிளை யுழையி னோடே
இளியொடு விளரி தார மென்பவே ழிசையி னாமம்'

'நான்கொடு நான்கு மூன்று நலம்பெறு மிரண்டி னோடு
நான்குமூன் றிரண்டி னோடு நல்லமாத் திரைக ளாகும்'

'வண்டொடு கிள்ளை வாசி மதயானை தவளை தேனு
ஒண்டிற லாடென் றேழு மோதுமே ழிசையி லோசை'

| | | | | |
|---|---|---|---|---|
| குரல் | ... | 4 | ... | வண்டு |
| துத்தம் | ... | 4 | ... | கிளி |
| கைக்கிளை | ... | 3 | ... | குதிரை |
| உழை | ... | 2 | ... | யானை |
| இளி | ... | 4 | ... | தவளை |
| விளரி | ... | 3 | ... | பசு |
| தாரம் | ... | 2 | ... | ஆடு |

இருமொழிமரபினையும் ஒப்பவைத்து நோக்குமிடத்து,

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தாரம் | - | காந்தாரம் | (க) | - | ஆடு |
| விளரி | - | ரிஷபம் | (ரி) | - | பசு |
| உழை | - | நிஷாதம் | (நி) | - | யானை |
| கைக்கிளை | - | தைவதம் | (த) | - | குதிரை |

என நான்கு பெயரொற்றுமை ஐயப்பாடின்றித் தெளிவாகின்றது.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| குரல் | - | மத்திமம் | (ம) | - | கொக்கு | - | வண்டு |
| இளி | - | ஷட்ஜம் | (ஸ) | - | மயில் | - | தவளை |
| துத்தம் | - | பஞ்சமம் | (ப) | - | குயில் | - | கிளி |

எனும் மூன்று பெயரொற்றுமைக்கு வேறுகாரணங்களுமுள; அவற்றினைத் தருவாம்.

'வண்ணப்பட்டடை யாழ்மேல்வைத்து' (அரங்கேற்றுகாதை 63-ஆம் அடி) என்பதற்கு அடியார்க்குநல்லார் உரைகூறுமிடத்து, 'பட்டடை - நரம்புகளில் இளிக்குப் பெயர். என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின்......இளிக்கிரமத்தாலே பண்களை யாழ்மேல்வைத்து......' என்றனர்.

'ஷட்ஜம்' என்பதும் எஞ்சிய ஆறினுக்கும் அடிமணையெனப் பொருள்தரும். ஆதலின், ஷட்ஜம்—இளி, ஷட்ஜக்கிராமம்—இளிக்கிரமம் எனநின்றமை தெளிவாகின்றது.

'மகாரத்தினொற்றூற் சுருதிவிரவும்' என்றமையின் குரல் நரம்பினுக்கு ஆளத்தியெழுத்து 'ம' என்பது பெறப்பட்டது.

ஷட்ஜக்கிராமத்திலே (இளிக்கிரமத்திலே) ஸ-ரி-க-ம-ப-த-நி என்னும் ஏழிற்கும் சுருதிகள் 4-3-2-4-4-3-2 என வடமொழிநூல் கூறும். குரன்முதலேழினுக்குங்கூறிய 4-4-3-2-4-3-2 மேலையதனோடு நிரல்ஒத்து வாராமையையும், இளி விளரி தாரம் குரல் துத்தம் கைக்கிளை உழை யென வைக்குமிடத்து 4-3-2-4-4-3-2 என நிரல் ஒத்துவருதலையும் நோக்குக.

இங்ஙனம் ஆராயுமிடத்துக் குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன முறையே ம-ப-த-நி-ச-ரி-க என்னும் ஏழுமாம் என்பது தெளிவாகின்றது.

நால்வகைப் பெரும்பண்ணிற்கும் பண்டையோர்கண்ட நரம்பு அடைவினைநோக்க இம்முடிபு மேலும் தெளிவாகும். பதினான்கு நரம்பினையெடுத்து மெலிவு நான்கு, சமன் ஏழு, வலிவு மூன்று எனக் கொண்டார்கள்.

'தாரத்து உழைதோன்றப் பாலையாழ்'
மெலிவு "க" முதல், சமன் "நி" முதல்

'தண்குரல் ஓரும் உழைதோன்றக் குறிஞ்சியாழ்'
மெலிவு "நி" முதல், சமன் "ம" முதல்

'நேரே இளி குரலிற்றோன்ற மருதயாழ்'
மெலிவு "ம" முதல், சமன் "ச" முதல்

'துத்தம் இளியிற்பிறக்க நெய்தல்யாழ்'

[இங்கு நெய்தல்யாழ் என்றது செவ்வழியாழ் என்னும் பெரும்பண்ணினை]
மெலிவு "ச" முதல், சமன் "ப" முதல்

மேற்கண்ட முடிபுகளை அட்டவணைப்படுத்தக் கிடைப்பது:

| | மெலிவு | சமன் | வலிவு |
|---|---|---|---|
| பாலை | க ம ப த | நி ச ரி க ம ப த | நி ச ரி |
| குறிஞ்சி | நி ச ரி க | ம ப த நி ச ரி க | ம ப த |
| மருதம் | ம ப த நி | ச ரி க ம ப த நி | ச ரி க |
| செவ்வழி | ச ரி க ம | ப த நி ச ரி க ம | ப த நி |

நாற்பெரும் பண்ணினுமுள்ள ஸ்வரங்கள் எந்த எந்த ஸ்வரஸ்தானங்களில் நின்றனவென்பதையும் பெரும்பண் நான்கும் இக்காலத்தில் வழங்கும் எந்த எந்த மேளகர்த்தாராகங்களுக்கு ஒப்பான என்பதையும் நரம்புநீளத்தைக் கணிதமுறையாக ஆராய்ந்த தன்பின்னர்த் தொடர்ந்துவரும் பொருளுரையொன்றினுள்ளே ஆராய்வாம்.

குரவைக்கூத்தாடுதற்கு இயைந்துநின்ற இளமகளிர் எழுவரையும் இடைமுதுமகள் தொன்றுதொட்டுவரும் முறையில் நிறுத்தி, அவர்தமக்குப் பெயரிடுவாளாய்க் குரல்நரம்பினை (ம) மாயவன் என்றாள்; இளிநரம்பினை (ச) வெள்ளையாயவன் (பலதேவர்) என்றாள்; துத்தநரம்பினை (ப) பின்னை என்றாள்.

'குரன்மந்த மாக இளிசம னாக
வரன்முறையே துத்தம் வலியா—உரனிலா
மந்தம் விளரி பிடிப்பா ளவணட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்'

மெலிவுத்தானத்திலே குரல்(ம), சமன்தானத்திலே இளி(ச), வலிவுத்தானத்திலே துத்தம்(ப), மீட்டும் மெலிவுத்தானத்திலே விளரி (ரி) எனப்பொருந்திநிற்பது மேலே நாம் நாற்பெரும்பண்ணுக்கும் காட்டிய நரம்புநிரலிலே செவ்வழியாழ் என்னும் பெரும்பண் நிரலில்மாத்திரமேயாம். பாடிய முல்லைத்தீம்பாணியும் செவ்வழியாழிற்கு உரியது.

எழுவர்மகளிரும் நின்ற முறையினைப் பாலைத்திரிபு உரைக்கும் மற்றொரு பொருளுரையினுள்ளே ஆராய்வாம். 'இடமுறை,' 'வலமுறை' என்பவற்றைக் குறித்துச் சுருக்கமாக இங்கு ஆராய்வாம்.



இப்பொருளுரையின்தொடக்கத்திலே தந்த இருபாடல்களுள் முதற்பாடலிலே, பின்னைப்பிராட்டி கடல்வண்ணனிடத்துளாள், தன்முன்னோன் வலத்துளாள் எனக் கூறப்பட்டது. அனைவரும் நடுவிடத்தைநோக்கிநிற்க இஃது அமையும். இரண்டாம்பாடலி னுள்ளே, பின்னைப்பிராட்டி மாயவன் வலத்துளாள், தன்முன்னோன் இடத்துளாள் எனக் கூறப்பட்டது. அனைவரும் புறம்நோக்கிநிற் குங்கால் இஃது அமையும். நடுவிடத்தைநோக்கியநிலையில், குர லுக்கு இடப்புறத்திலே துத்தம், துத்தத்திற்கு இடப்புறத்திலே கைக்கிளை யென் றிவ்வாறு அமைதலின் குரற்கிரமத்திலே (மத்தி மக்கிராமத்திலே) ம—ப—த—நி—ச—ரி—க இடமுறையாகும்; ம—க—ரி—ச—நி—த—ப வலமுறையாகும். சிக்ஷையிலும், மகரந்தத்திலும் இம் முறையே கூறப்பட்டிருத்தலை மேலே காட்டினும்.

மத்திமக்கிராமத்திலே பஞ்சமம் மூன்றுசுருதியும், தைவதம் நான்குசுருதியும் பெறுமென மகரந்தநூல் கூறுகின்றது. மூவகைக் கிராமங் (கிரமங்)களின் இயல்பையும் கிளைநரம்பு, நட்புநரம்புகளின் நீர்மையையும் பிறவற்றையும் "இசைக்கிரமம்" என்னுந் தலைப் பெயர்க்கீழ்த் தனியாக ஆராய்வாம்.

---

உ

# உயிரைக் காணலாமா?

[பண்டிதர். க. போ. இரத்தினம் அவர்கள்.]

இது என்ன வினு? உயிரைக் காணமுடியாதென்பது சிறுவருக்குந் தெரியுமே என்று இலேசாகப் பதிலிறுக்கலாம். ஆனுல் "காண்கிறோம், கண்டோம்" என்று சொல்லுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சொல்லுகிறமாதிரியைப் பார்த்தால் திகைப்புண்டாகிறது. ஆச்சரியங்கூட உண்டாகிறது. ஏன்? உயிரைக் காணமுடியாதென்கிறவர்களையும் அவர்கள் நன்கு அறிந்திருக்கிறார்கள். அவர்களுங்கூட உயிரைக் காணமுடியாதென்று தான் முன் எண்ணியிருந்தார்கள். பின்பு, தம் கண்ணாரக்கண்டு, காணமுடியாதென்பவர்களையும் பழிக்கிறார்கள். தம்முயிரையே தாம் காண்கிறார்களாம். அந்த உயிர் பேசுகின்றதாம். அசைகின்றதாம்................. என்ன ஆச்சரியம்!

இச்செய்தி இக்காலத்தில் பத்திரிகைமூலம் அறிந்ததொரு புதினமன்று. எங்களுடைய பழந்தமிழ்நூல்களிலே கூறப்பட்டிருக்கின்றது. ஒரு காதலனும் காதலியும் வினைவசத்தாற்கூடி இன்பத்தை அடைகின்றனர். தலைவன் தன் உயிரைத் தன் தலைவியிடத்திற் காண்பதாகக் கூறுகிறான். அவளைத் தன் உயிரென வியக்கிறான். அகப்பொருள் நுதலிய பழந்தமிழ்நூல்களிலும் பிற்காலக் கோவைநூல்களிலும் பல தலைவர்கள் தங்கள் உயிர்களைக் காதலிகளிடத்திற் கண்டு பலவாறு கூறிய கூற்றுக்கள் காணப்படுகின்றன. அக்கூற்றுக்கள் உண்மையாகுமா? என்பதைப்பற்றி ஆராயுமுன் அக்கூற்றுக்களிற் சிலவற்றையாகுதல் ஈண்டு நோக்குவோம்.

களவியற்காரிகையுரையில் மேற்கோளாகப் பின்வரும் சிறு செய்யுள் காட்டப்பட்டிருக்கிறது.

"புலனன் றென்ப இன்னுயிர் அதுவே
அலர்முலை யாகம் தாங்கி
நிலவொளி மதியின் நிலவுமென் உயிரே"

தொல்காப்பியக் களவியற்சூத்திரமொன்றுக்கு நச்சினார்க்கினியரால் மேற்கோளாகக் காட்டப்பட்ட செய்யுள் வருமாறு:—

"காணா மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாம் காண்டுமெம் அரும்பெற லுயிரே
சொல்லும் ஆடும் மென்மெல இயலும்
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே"

"தேயத் தவருயி ரைப்புல னன்றென்பர் செந்நிலத்தே
காயக் கனன்றெதிர்ந் தார்மரு மத்துக் கடுங்கணைகள்
பாயச் சிலைதொட்ட பஞ்சவன் வஞ்சிப்பைம் பூம்பொழிற்கண்
ஆயத் திடையிது வோதிரி கின்றதென் ஆருயிரே"

என்பதும்,

"இன்னுயிர் கண்டறி வாரில்லை யென்பர் இகன்மலைந்தார்
மன்னுயிர் வான்சென் றடையக் கடையலுள் வென்றுவையந்
தன்னுயிர் போல்நின்று தாங்குமெங் கோன்கொல்லித் தாழ்பொழில்வாய்
என்னுயிர் ஆயத் திடையிது வோநின் றியங்குவதே"

என்பதும் பாண்டிக்கோவை.

"என்னுயிர்............இளமுலையும் வேய்த்தோளும்
பொன்னிறமுங் கொண்டு புனமயில்போல்—மன்னி
வயங்குகின்ற நெய்தல்வாய் வானவன்றன் வெற்பில்
இயங்குகின்ற தாயத் திடை"

என்பது களவிவிளக்கம்.

இனி, மணிவாசகர் திருவாய்மலர்ந்தருளிய செய்யுளையும் கடைசியாகக் காண்பாம்.

"நேயத்த தாய்நென்னல் என்னைப் புணர்ந்துநெஞ் சந்நெகப்போய்
ஆயத்த தாயமிழ் தாயணங் காயர னம்பலம்போல்
தேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே"

மேலேகுறிப்பிட்ட செய்யுட்களிற் கூறப்பட்டன ஏற்றுக் கொள்ளத்தக்கனவா?

பூதக்கண்ணுடியின் துணைகொண்டு கண்ணுக்குத் தெரியாத ஒருபொருளைப் பார்க்கின்றேம். அக்கண்ணுடியின் துணையின்றிப் பார்த்து அப்பொருளைக் காணமுடியாத ஒருவர் நாம் சொல்வது உண்மையல்லவென்ருல் அஃது ஏற்றுக்கொள்ளத்தக்கதாம். இன்னும், நாம் பூதக்கண்ணுடிமூலம் பார்க்கும்படி ஏவினல், அதைப் பிழையாக உபயோகித்துப் பொருளைப் பார்க்கமுடியாது, நாம் சொல்வது பொய்: என்று சொல்லுகிறவர்களை என் செய்யலாம்?

தம் உயிர்க்காதலியிடத்தில் தம் உயிரைக் கண்டதாகக் காதலர் சொல்லுகின்ருர்கள். அவர்கள் அன்பாகிய கண்ணுடிமூலம் கண்டிருக்கிருர்கள். அப்படிப்பட்ட அன்பாகிய கண்ணுடியை அணிந்துபார்த்தபின்பே நாம் ஒரு முடிபுக்குவரவேண்டும். இனிக் கண்ணுடியிற்கூடச் சக்திவேறுபாடுகள் (Power) உண்டல்லவா? ஆகவே நாம் அணியும் அன்புக்கண்ணுடி போதிய சக்தியுடையதா? என்பதையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இதனை நாம் நுணுகி ஆராயும்போது "அன்பு" என்ற பொருள் குறுக்கே கிடக்கின்றது. இந்த அன்பின் தத்துவத்தை—சக்தியை—அளவிட்டறிவது இலேசானகாரியமன்று.

"அன்புடையார் பிறர்க்கு என்புமுரியர்" என்ருர் திருவள்ளுவர். இன்னும், அவரே

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு"

என்று அறைந்தனர். காதலன்புமிக்க காதலன் தன்னுயிரைக் காதலியிடத்துக் காண்கின்ருன். காதலி தன்னுயிரைக் காதலினிடத்திற் காண்கிருள். இவர்களுக்குத் தத்தம் உயிரைக் காட்டிக் கொடுப்பது காதலன்பே.

இன்னும், இவ்வன்பு முதிர்ந்துமுதிர்ந்து அருளாக மாறுகிறது. அருளை அன்பு ஈனும் மகவு என்று திருவள்ளுவர் அறிவிக்கிருர். இந்த முதிர்ந்த அன்பினல் - அருளினல் - ஒருவன் தன்

உயிரை மற்றைய பிராணிகளிடத்திலெல்லாம் காண்கின்றான். இவன்தான் தன்னுயிர்போல் மன்னுயிரைப் போற்றலாம்.

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்ற திருக்குறளிற் கூறப்பட்ட அந்தணன் இவனே. இவனிடமிருந்துதான் "தாம்வளர்த்ததோர் நச்சுமாமரமாயினும் கொல்லார்" எனும் அருள்வாக்கியம் பிறக்கும். இவன்தான் கடந்தபொருளை - கடவுளைக் காண்கின்றான். அவரை "அன்பினில்விளைந்த ஆரமுதே" என்று போற்றுகின்றான்.

ஆகவே, ஒருவனுக்குத் தன் உயிரைக் காதலியிடத்துக் காட்டிக்கொடுப்பதும், மற்றப்பிராணிகளிடத்தெல்லாம் காட்டிக் கொடுப்பதும், அன்றியும், கடவுளைக் காட்டிக்கொடுப்பதும் அன்பே. இதனாலேயே திருமூலரும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே" என்றார்.

"அன்பே சுவர்க்கம், சுவர்க்கமே அன்பு" (Love is Heaven, Heaven is Love.) என்றார் ஆங்கிலப்புலவரொருவர்.

உயிரைக் காணலாமா? என்று தொடங்கி, கடவுளையும் காணலாம் என்ற முடிபுக்குவரச்செய்த அன்பின்தத்துவத்தை யாரால் அளவிடமுடியும்?

"என்பென்பது யாக்கை என்ப துயிரென்ப திவைக ளெல்லாம்
பின்பென்ப அல்ல வேனும் தம்முடை நிலையிற் பேரா
முன்பென்ப உளதென் றாலும் முழுவதும் தெரிந்த வாற்றால்
அன்பென்ப தொன்றின் றன்மை அமரரும் அறிந்த தன்றால்"

(கம்பர்.)

---

ஸ்ரீ:

# மதிப்புரை



ஸ்ரீ சாதாசிவப்பிரும்மேந்திராள் சரிதம்:-தென்னாட்டுப் பெரியோர்களுள் ஸ்ரீ சதாசிவப்பிரும்மேந்திரரும் ஒருவர். இவர் சிறந்த ஆன்மஞானி; அதிவர்ணாசிரமி; அவதூதர். இவருடைய அவதாரத்தலம் பாண்டிநாட்டின் தலைநகராகிய மதுரையென்ப. இவர் வாழ்ந்த காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டென்ப; கி. பி. 16-ஆம் நூற்றாண்டென்று கூறுவாரும் உளர். இவர் சிருங்கேரி சாரதாபீடத்தை அலங்கரித்த ஸ்ரீ. நரஸிம்மஸ்வாமிகளாலும், கும்பகோணம் காமகோடிபீடத்தையலங்கரித்த பரமசிவேந்திராலும், புதுக்கோட்டையரசர், தஞ்சைச் சரபோஜி மஹாராசர் முதலியோராலும், வடநாட்டினராலும் நன்குமதிக்கப்பெற்றவர் என்ப. இவர், பரமசிவேந்திரரென்னும் பெரியாரிடம் அத்யாத்மநூல்களைப்பயின்று தெளிந்தவர். பிரும்மசூத்திரத்திற்குப் பிரும்மதத்துவப்பிரகாசிகையென்று ஒரு விருத்தி இயற்றியவர். அத்வைதசித்தாந்தவிஷயமாய் இவரியற்றிய நூல்கள் பல. இவர் சரிதமாகச் சிறந்த இனிய தமிழ்க் கவிகளால் புதுக்கோட்டை மஹாராஜாகாலேஜ் தமிழ்ப்பண்டிதர் வித்துவான் ஸ்ரீ. நா. கனகராஜையரவர்கள் இயற்றிய அரியநூல் ஒன்று உண்டு.

சதாசிவர்சரிதமெல்லாம் யாவரும் நன்கு அறியுமாறு இது பொழுது நெரூர் ஸ்ரீ சதாசிவப்பிரம்மேந்திரசபையார் ஒரு வசனநூலை எழுதி அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். இதனுள், சதாசிவர்சரித விஷயமாக ஆங்காங்குக் கிடைத்த குறிப்புக்களும் கன்னபரம்பரைச் செய்திகளும் தொகுக்கப்பட்டு நன்கு வரையப்பட்டுள்ளன. இதன் வசனநடை எளிமையும் தெளிவும் வாய்ந்தது.

பத்து அத்தியாயமாக அழகிய படங்களுடன் அச்சிடப்பட்ட இதன்விலை அணா 6. வேண்டுவோர் நெரூர் ஸ்ரீ சதாசிவப்பிரம்மேந்திரஸபைக் காரியதரிசியவர்களிடம் பெறலாம்.

---

கம்பர்மாலை:—இது, இராமபிரானையும் சடகோபரையும் கம்பரையும் விஷயமாகக்கொண்டு, கம்பரும் பிறரும் இயற்றிய செய்யுட்களால் தொடுக்கப்பட்டது; திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கத்தின் ஒன்பதாவது வெளியீடாகப் பதிக்கப்பெற்றுக் கச்சியம்பதியில் நிகழும் விஷு வருஷ வைகாசித்திருநாளில் கருடஸேவையன்று பேரருளாளப்பெருமாள் திருவடிவாரத்திற் காணிக்கையாக ஸமர்ப்பிக்கப்பெற்றது; தோத்திரம், இராமாவதாரச்சுருக்கு, பெருமாள் புறப்பாடு, கலம்பகம், இராமாவதாரத்திரு, சடகோபரந்தாதி, கம்பர்சீர்ப்பதிகம், கம்பரிருபது: என்னும் எட்டுப்பகுப்புடையது. திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கக்காரியதரிசியான பந்தல்குடி பாரத்வாஜ மாடபூசி. ஸ்ரீ. ரே. திருமலை ஐயங்காரவர்கள் இதன் பதிப்பாசிரியராவர்.

இதனுள், முதலில் திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கத்தின் உபதலைவர் ராவ்ஸாஹிப் ஸ்ரீ. R. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் எழுதிய முன்னுரையும், அதனையடுத்து, இதன் பதிப்பாசிரியர் எழுதிய விரிந்த முகவுரையும் அமைந்துள்ளன.

பின்னர்த் தோத்திரம் என்ற முதற்பகுப்பில் 98 செய்யுட்கள் உள்ளன. இவற்றுள் முதற் பன்னிரண்டுசெய்யுட்கள் இராமாயணத்தின் ஒவ்வொருகாண்டத்தின் தொடக்கத்திலும் கடவுள் வாழ்த்தாக அமைந்தவை; ஏனையவை விராதனும் இந்திரனும் கவந்தனும் சுக்கிரீவனும் வாலியும் பிரகலாதாழ்வானும் பிரமனும் வருணனும் கருடனும் விண்ணவரும் சதுமுகனும் ஆங்காங்கு இராமபிரானையும் திருமாலையும் துதித்தனவாக இயன்றவை.

இராமாவதாரச்சுருக்கு என்னும் இரண்டாம்பகுப்பினுள் உத்தரகாண்டத்து அசுவமேதயாகப்படலத்துள்ள 100 கவிகள் எடுத்துச்சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றால் இராமாவதாரம் முதல் இராவணவதாநந்தரம் இராமபிரான் முடிசூடியதுவரையுள்ள சரிதங்களை அறியலாம்.

பெருமாள்புறப்பாடு என்ற மூன்றாம் பகுப்பினுள் உள்ள ஆறு கவிகளும் அசுவமேதயாகப்படலத்துள்ளனவே; அயோத்திநகர அரசமாளிகையினின்று கோமதிநதிக்கரையிலுள்ள அசுவமேத யாகசாலைக்கு இராமபிரான் சென்றவாறு கூறும் இக்கவிகளுள்ளும் இராமாயணகதாசங்கிரகம் அமைந்திருத்தல் நோக்கத்தகும்.

கலம்பகம் என்ற நான்காம்பகுப்பினுள், பரதத்துவம் என்ற தலைப்பின்கீழ், இராமபிரான் பரம்பொருளே என்றும் சீதாபிராட்டி திருமகளே என்றும் அறுதியிடும் 23 கவிகளும், திருமந்திரம் என்ற தலைப்பின்கீழ்த் திருமால் திருவெட்டெழுத்தின் பெருமையை விரிக்கும் 5 செய்யுள்களும், கருடஸேவை என்ற தலைப்பின்கீழ்த் தேவர்களுக்குத் திருமால் கருடாரூடராய்க் காட்சியளித்தவாறு கூறும் 2 கவிகளும், நாதன்பாதுகம் என்ற தலைப்பின்கீழ் இராமபிரானுடைய திருவடிகளைத்தாங்கும் பாதுகத்தின் பிரபாவம் கூறும் 7 கவிகளும், அபயப்ரதானம் என்ற தலைப்பின்கீழ் இராமபிரான் விபீடணாழ்வானுக்கு அபயப்ரதானம்பண்ணியவாறு கூறும் 6 கவிகளும், திருவடிப்பிரபாவம் என்ற தலைப்பின்கீழ் இராமபிரானுடைய சரணாரவிந்தங்களின் பெருமைபேசும் 5 கவிகளும், சரணாகதிவைபவம் என்ற தலைப்பின்கீழ் எவ்வகையான பேற்றுக்கும் சரணாகதியே சிறந்த உபாயமென்றுதெரிக்கும் 1 கவியும் தொகுக்கப்பெற்றுள்ளன.

இராமாவதாரத்திரு என்ற ஐந்தாம்பகுப்பினுள், திருவவதாரமென்ற தலைப்பின்கீழ், இராமபிரானும் இளையோரும் பிராட்டியும் அவதரித்த நாளும் கோளும் முதலியனகூறும் கவிகளும், திருமணம் என்ற தலைப்பின்கீழ் இராமபிரானுக்கும் இளையோர்க்கும் திருமணம்நிகழ்ந்தவாறு கூறும் கவிகளும், திருவபிடேகம் என்ற தலைப்பின்கீழ், வசிட்டன் முதலியோர் இராமபிரானை மந்திரநன்னீராட்டியவாறு கூறும் கவிகளும், திருமுடிசூடல் என்ற தலைப்பின்கீழ் வசிட்டமுனிவன் இராமபிரானுக்கு முடிசூட்டியவாறு கூறும் கவிகளும், பயன் என்ற தலைப்பின்கீழ் இராமாயணபாராயணஞ்செய்வாரெய்தும் பயனியம்பும் கவிகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

சடகோபரந்தாதி என்னும் ஆறும்பகுப்பினுள், கம்பரியற்றிய சடகோபரந்தாதியிலிருந்து 12 செய்யுட்கள் எடுத்துச்சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றால் கம்பர்க்குச் சடகோபரிடத்தும் அவரியற்றிய திருவாய்மொழியினிடத்தும் உள்ள ஈடுபாட்டினை நன்கறியலாம்.

ஸ்ரீ. கோபாலாசாரியரவர்கள் இயற்றிய கம்பர்சீர்ப்பதிகமும், திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கத் தலைவர் ஸ்ரீ. R. கேசவையங்காரவர்கள் இயற்றிய கம்பரிருபதும் முறையே 7, 8-ஆம் பகுப்புக்களாக அமைந்துள்ளன.

இம்மாலை, விரிந்து பரந்து ஆழ்ந்துள்ள கம்பர் காவியமுழுதும் முறையே கற்க அவகாசமில்லாதவர்க்கும், சிறுபொழுதில் அவர்தம் கவிச்சுவை நுகர்தற் குதவுவது.

இம்மாலைக்கு இதன் பதிப்பாசிரியரெழுதிய முகவுரையுள், திருவாய்மொழி திருக்குறள் முதலிய திவ்யப்ரபந்தங்களின் கருத்துக்களும் சொற்களும் சொற்றொடர்களும் கம்பர்காவியத்துப் பயின்றுள்ளமை விரிக்கப்பட்டிருக்கிறது.

கல்வியிற்பெரிய கம்பரைப் பாராட்டியொழுகும் கடப்பாடு தமிழரெல்லார்க்கும் உரியதே. அவரை யார் யார் எத்தனை யெத்தனைவகையாற் பாராட்டினும் தகும், மிகையாகாது. அம்முறையில், திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்கக் காரியதரிசியவர்கள் இம்மாலையை வெளியிட்டுக் கம்பர்திறத்துத் தமக்குள்ள அன்பினை ஒருவாறு வெளியிட்டுள்ளார்.

இது வேண்டுவோர், காரியதரிசி, திருவல்லிக்கேணித்தமிழ்ச் சங்கம், 42 A, வெங்கடாரங்கம்பிள்ளைதெரு, திருவல்லிக்கேணி, சென்னை: என்ற விலாசத்திற் பெறலாம்.

---

## II. செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | |
|---|---|---|
| 1 | ஐந்திணையைம்பது (உரையுடன்) ... ... | 0 4 0 |
| 2. | களவழி (5) இனியவைநாற்பது (உரையுடன்) ... | 0 3 0 |
| 3. | *வளையாபதிச்செய்யுட்கள் ... ... ... | |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 3 0 |
| 6. | *நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | |
| 7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 6 0 |
| 8. | திணைமாலை நூற்றைம்பது (உரையுடன்) .. | 0 8 0 |
| 9. | அநுமானவிளக்கம் ... ... ... | 0 10 0 |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 2 0 |
| 11. | *விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | |
| 12. | *பன்னிருபாட்டியல் ... ... ... | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 4 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 3 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 3 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 8 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 12 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 4 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 3 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 2 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 8 0 |
| 22. | *திருக்கலம்பகம் (ஷை) ... ... | |
| 23. | *விக்கிரமசோழனுலா ... ... ... | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 1 0 |
| 25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை... ... | 0 2 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 1 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... ... | 0 8 0 |
| 28. | *சந்திராலோகம் ... ... ... | |
| 29. | *சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... ... | 0 3 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 4 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 8 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 8 0 |
| 34. | *அகப்பொருள்விளக்கம் ... ... ... | |
| 35. | *திருமந்திரநூறுபாட்டுக்குறை ... ... | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 1 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 8 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... | 0 2 0 |
| 39. | *பழமொழி மூலமும் பழையஉரையும் (முதல் 100 செய்) | |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 8 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 6 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 12 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | மேகவிடுதூது | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடும் தமிழும் | 0 | 6 | 0 |
| 49. | *கடைவள்ளலார்காலம் | | | |
| 50. | தமிழரும் ஆந்திரரும் | 0 | 4 | 0 |
| 51. | *மதங்களுளாமணி | | | |
| 52. | கூடற்புராணம் | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் (தமிழ்) | 0 | 6 | 0 |
| | ஷை (ஆங்கிலம்) | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்கநிகண்டு | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் | 0 | 10 | 0 |
| 57. | மதுரைமும்மணிக்கோவை | 0 | 5 | 0 |
| 58. | பழனிப் பிள்ளைத்தமிழ் | 0 | 3 | 0 |
| 59. | கடம்பர்கோயில் உலா | 0 | 6 | 0 |
| 60. | சங்கரநயினார்கோயில்அந்தாதி | 0 | 6 | 0 |
| 61. | கலைசைக்கோவை | 0 | 12 | 0 |
| 62. | பெருந்தொகை | 5 | 0 | 0 |
| 63. | சூடிக்கொடுத்தநாய்ச்சியார்தோத்திரப்பாமாலை | 0 | 5 | 0 |
| 64. | சிராமலைக்கோவை | 0 | 12 | 0 |
| 65. | மத்யமவியாயோகம் | 0 | 2 | 0 |
| 66. | சந்திரகுப்தன் | 0 | 6 | 0 |
| 67. | அமிர்தரஞ்ஜநி | 0 | 2 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டுவெளியாகிவரும் இச்" செந்தமிழ் "ப்பத்திரிகைக்கு வருஷச்சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணு 8. வெளிநாடுகளுக்கு வருஷச்சந்தா ரூ 4—8—0. இதுவரை 37 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி—இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

3. சங்கப்பதிப்புப்புத்தகங்களை, ஒரு ரூபாய்க்கும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு, ரூபா ஒன்றுக்கு அரை அணு வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.